Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் — 312

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM–631503.

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100

பேரருளாளன் பெருந்தேவித் தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாதுமில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1974ஆ ஆனி மாத வெளியீடு

# கடிதம் (16—7—74)

பத்ராதிபஸ்வாமி ஸன்னிதியில் மதுரை **ரங்கராஜன்**, M.A., B.T. விண்ணப்பிப்பது.

'ஆழ்வார்களும் வேதங்களும்' என்று பெயரிட்ட ஒரு நூலை 'அஹோ' வெளியிட்டிருக்கிறார். வரலாற்றிற் பிறந்த வைணவத்திற்கான கழுவாயோ என்று கருதினேன். அப்படியொன்றுமில்லை. நூல்முழுதும் ஒருவிசை படித்தேன். அபத்தங்களுக்கு அளவில்லை. ஒரு தமிழ்வாக்கியமாவது பிழையின்றியில்லை. தமிழுக்கும் அவருக்கும் ஸ்நாநப்ராப்தியேயில்லைபோலும்! மடலூர்ந்து என்று எழுதவேண்டு மிடத்தில் மடலூரி என்றே எழுதுகிறார்.

ஆழ்வார் நாயகிதசையை அடைந்ததற்கு 'த்வார பூதமான ரஸபேதம்தான் காரணம்' என்று எழுதுகிறார். தாமானதசையை விட்டு நாயகிதசையை அடைந்து பகவதநுபவம் பண்ணலாம் என்று வேதம் காட்டியவழி என்று குறிப்பிடுகிறாரே தவிர அவ்வழியைப் பிரமாணங்களைக்காட்டிச் சிறிதேனும் உபபாதித்திலர். அநந்யார்ஹ சேஷத்வம், அநந்ய சரணத்வம் முதலியன சிலசமயங்களில்தான் ஆழ்வார்களுக்கு நாயகி தசையை அடைவிக்குமாம். மற்ற சமயங்களில் வேதம் காட்டிய வழிதானும்.

'பெரியாழ்வார், பிள்ளைத்தமிழ் ஸம்ப்ரதாயத்தைப் பின்பற்றி அசோதையாக மாறினார்' என்று கூசாமல்-ஆராயாமல் எழுதுகிறார். பெரியாழ்வார் திருமொழிதான் மிகப் பிற்காலத்தே பிள்ளைத் தமிழ்ச்சிற்றிலக்கியங்கள் தோன்றக் காரணமா யிருந்தது என்பதைத் தமிழிலக்கிய வரலாறு உணர்த்துகிறது. ஆனால் அஹோவுக்கோ பிற்காலப் பிரபந்தங்களே பெரியாழ்வாருக்கு அடிப்படையா யிருந்தன என்று தோன்றுகிறது.

சில இடங்களில் பிராட்டிதசை என்றும் நாயகிதசை என்றும் இரண்டாகப் பிரிக்கிறார். பிராட்டியினும் நாயகி வேறு என்றே நினைத்திருக்கிறார். (பக். 89)

மேற்கோளாக எடுக்கும் பாசுரங்களில் சீரை வெட்டி, எழுத்தைத் திருகி, ஓரடியைச் சிதைத்து அவர் செய்திருக்கும் கொலைகள் பஞ்சமாபாதகத்தினும் கொடியது.

இந்த நூலில் ஒரேஒரு காரியம்தான் செய்திருக்கிறார். எங்கெங்கு மறை, மறையவர், வேதம், வேள்வி இவை வருகின்றன என்று ஒரு லிஸ்டு எடுத்திருக்கிறார். இதைச் சாதாரணமான ஒருவன் செய்துவிடலாம்.

இந்த நூலில் ஒரு வேதவாக்யமும் உதாஹரிக்கப்படவில்லை. வேதத்தின் பெருமையையும் வேள்வியின் சிறப்பையும் எடுத்துக்கூறுவதே ஆழ்வார்களின் உயரிய நோக்கம் என்று எழுதுகிறார். இதனை யார் இல்லை செய்கிறார்கள்? ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளும் வேதத்தோடொக்கும் என்று ஓரிடத்திலும் எழுத அஹோவுக்கு மனம் துணியவில்லை. நம்மாழ்வாரையும் அருளிச்செயல்களையும் திவ்யதேசங்களையும் வேதபுருஷனை குறிப்பிட்டிருப்பதைத் தேவரீர் பல இதழ்களில் (ஸ்ரீராமாநுஜன்) சுட்டிக்காட்டி விளக்கியிருப்பதை அவர் காணவில்லையா? காணுக் கண்ணிட்டிருப்பரோ? திவ்யத்ரயத்திற்கும் பாஹ்பர்களான பாக்யஹீநர்களுக்கு யார் தாம் உணர்த்தவல்லர்! ... ... ... ... ...

# ஸ்ரீ ராமாநுஜன்–312



ஆசிரியர்:
மஹாமஹோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
**அண்ணங்கராசாரியர்.**

| ஸம்புடம் 26 | ஆனந்தஸ்ரீ ஆனி மாத வெளியீடு | ஸஞ்சிகை 12 |
|---|---|---|


## பத்ராதிபருடைய ஸொந்த விஜ்ஞாபனம்

அடியேன் (P.B.A.) ஏறக்குறைய மூன்றுவருஷகாலம் பார்வைக்குறைவினுல் ஆப்தர்களுக்கும் மற்றையோர்க்கும் எழுதவேண்டிய கடிதங்களைக் கைப்பட எழுதமுடியாமல் பிறரைக் கொண்டே எழுதுவித்துவந்தேன், அவசியம் வாசிக்கவேண்டியவற்றையும் கட்புலனுக்கு இலக்காக்க முடியாமல் செவிப்புலனுக்கே இலக்காக்கிவந்தேன். இங்ஙனே மூன்று வருடங்கள் கடந்தன. சென்ற பிரமாதீச ஸ்ரீ மாசிமாத முடிவில் நேத்ர சிகித்ஸை செய்து கொண்டதன்பலனுக முன்போல் வாசிக்கவும் எழுதவும் சக்திபெற்றிருக்கிறேன் என்னலாம். பரிபூர்ணசக்தி யென்று சொல்வதற்கில்லை; 'ஒருவாறு, என்னலாமத்தனை. பிராயத்திற்கேற்ற அசக்தி தவிர்க்க முடியாமலிருப்பதால் அவ்வசக்திதான் ஓங்கி நிற்கிறது.

அடியேனுக்கு ' ஆப்தர்கள் ' நாற்றிசைகளிலும், ' ஏன்? எண்டிசைகளிலும் மலிந்திருப்பதால் அவரவர்கள் என்னுடைய ஸ்வஹஸ்தலிகிதமான கடிதங்களை நெடுநாளாகப் பெருமல் வருந்தியிருந்ததனுல் (சென்றமேமாதத்திலிருந்து) சிலபல பெரியார்களுக்கும் நண்பர்களுக்கும் கைப்படவே கடிதங்களெழுதிவருகிறேன். இதனுல் அவரவர்களுக்குண்டாகும் மகிழ்ச்சியின் கனத்தையுமறிந்து மகிழ்கிறேன். அங்ஙனே நாம் கைப்பட எழுதிவருகிருேமென்பதையறிந்த வேறு பலரும் நமக்குக் கடிதங்களெழுதி, கைப்பட பதில்ஸ்ரீமுகம் ஸாதிக்கவேணுமென்று கோருகிருர்கள். 'இன்லாண்டுலெட்டர்' (அந்தர்தேசீய பத்ரம்) என்கிற தபால்காகிதத்தில் பலர் எழுதுகிருர்கள். வெள்ளைக் காகிதத்தில் எழுதப்படும் எழுத்துக்களை மட்டுமே நாம் வாசிக்கமுடிகிறது. எழுத்துக்களையும் நல்ல மசியில் விட்டுவிட்டெழுத வேணும். இன்லாண்டுலெட்டரில் எழுதும் கடிதங்களுக்கு பதில் கிடைக்காது. வாசிக்க முடியாமையினுல்.

## நமது கண்டாக்டரைப்பற்றின மகிழ்ச்சிப் பேச்சு

ஸ்ரீமான் உ.வே.N.ஸ்ரீநிவாஸாசாரியர் என்பவர் நமக்கு நேத்ரசிகித்ஸகராக வாய்த்தார். இவர்சென்னை T. நகரில்பாண்டிபஜாரில்வாழ்பவர் இவரை நாம் முன்னமறி யோம். சில ஆப்தர்கள் மூலமாக இவருடைய பரிசயம் நமக்கு ஏற்பட்டது. அவரு டைய நற்குணங்களை உலகறிய நாம் எழுதாமலிருக்ககில்லோம். இவரைச் சந் தித்த சிலநாளுக்குள்ளாகவே நமக்கு இவரிடம் நேத்ரசிகித்ஸை நடைபெற்றது. [ஸ்ரீமதுபயவே. திருச்சேறை. T.S. திருமலாசாரியர் ஸ்வாமியின் புதியதிருமாளிகையில் நடைபெற்றது.] ஸ்ரீமான் டாக்டருடைய ஸம்ப்ரதாய மின்னதென்று தெரிந்து கொள்வதற்காக "உமக்குஆசார்யஸம்பந்தமுண்டோ?" என்று அவரைக் கேட்டேன். அதற்கு அவர் சிரித்துக் கொண்டே "அதைப்பற்றிச் சொல்லிக் கொள்ள வெட்க மாயிருக்கிறது" என்றார். அதற்குமேல் ஒன்றுங் கேட்கத் தோன்றாமல் நின்றுவிட் டேன். பிறகு ஒருவாரத்திற்குள் அவர் அடியேனிடம் வந்து தமது இரு தோள்களி லும் திருவிலச்சினையை [சக்ராங்கனக் குறியை]க் காட்டி "நேற்றுதான் முக்கூருக் குச் சென்று ஸ்ரீஅழகியசிங்கரிடம் ஸ்வரூபம் பெற்று விடைகொண்டேன்" என்று ஸந்தோஷமாகக் கூறினார். அடியேனும் பரமஸந்தோஷமடைந்தேன். இந்த டாக்டர் ஸ்வாமி மைஸூர் பிராந்தத்தவரென்று தெரிகிறது. விநயஸம்பத்து மலியப்பெற்றவர். *ஸ்மிதபூர்வாபிபாஷீ* பலபேர்களுக்குக் கண்கொடுத்தவர். கைவாசி யுள்ளவர். இவர் நீடுழி வாழவேணுமென்று பல்லாண்டு பாடுகிறோம்.

# "உபமா காளிதாஸஸ்ய"

இந்நிலவுலகில் அறிஞர்திரளில்'கவிகள்' என்கிறவகுப்பு நெடுநாளாகவே உள் ளது. கவிகளின் ப்ரசம்ஸை வேதத்திலேயே ஏறியுள்ளது, தைத்திரீயயஜுஸ்ஸம் ஹிதையில் மூன்றாவது காண்டம் நாலாவது ப்ரச்நத்தின் முடிவில் *ப்ரஹ்மா தேவாநாம் பதவீ: கவீநாம் ருஷிர் விப்ராணாம் மஹிஷோ ம்ருகாணாம்*...என்றொரு ருக்கு உள்ளது. இதில் தேவாநாம் கவீநாம் விப்ராணாம் ம்ருகாணாம்—என்றுள்ள ஷஷ்டிகளெல்லாம் நிர்த்தாரணேஷஷ்டிகள். தேவர்களுக்குள்ளே, கவிகளுக்குள்ளே விப்ரர்களுக்குள்ளே ம்ருகங்களுக்குள்ளே என்றபடி. மற்றவைகிடக்கட்டும். [கவீ நாம் மத்யே பதவீ: ச்ரேஷ்ட:] பத்யரசனைகள் பண்ணுமவர்களைக் கவிகளென்று கூறுவர். பொதுவாக வித்வான்களுக்கும் கவிகளென்று பெயருண்டு. பதவீ: கவீ நாம்" என்றவிடத்து வித்யாரண்யபாஷ்யம்—"விதுஷாம் மத்யே பதவாக்யப்ர மாணபிஜ்ஞ: ச்ரேஷ்ட:" என்றுள்ளது. இங்கு பட்டபாஸ்கரபாஷ்யம் தலைசுற்ற லாகவுள்ளது. ருஜுவான பொருளையெழுதாமல் ஏதேதோ விகல்பமாக எழுதி விட்டு வைதிகஸம்ப்ரதாய விருத்தமாக ஒன்று எழுதியுள்ளார். (அதாவது) "அநவ தாரணத் அநவக்ரஹ:" என்றார். உலகமுழுவதும் வைதிகர்கள்யாவரும் "பதவீ ரிதி பத—வீ:" என்று பதபாடத்திலும் க்ரம ஜடாகனங்களிலும் அவக்ரஹம் ஓதி வாராநிற்க அவக்ரஹமில்லையென்று ஸஹஸா எழுதிவைத்தது எதனாலென்றுவிளங்க வில்லை. ப்ரக்ருதம் இது நமக்கு விவக்ஷிதமன்று. கவிநாம ப்ரஸ்தாவம் வேதத் திலுமுண்டென்று காட்டவந்தோமத்தனை. வால்மீகி முனிவர்க்கு ஆதிகவியென்றே

பெயர்வழங்கிவருகின்றது. பவபூதிமஹாகவி உத்தரராமசரித நாடகமியற்றத் தொடங்கும்போதே "இதம் கவிப்ய: பூர்வேப்ய:" என்கிறார். பஹுவசன மிருந்தாலும் அது பூஜாயாம் பஹுவசனமாகி வால்மீகி மஹர்ஷியொருவரையே குறிப்பதாகுமென்பர் பெரியோர். திருவாய்மொழியில் நம்மாழ்வார் "ஒன்றியொன்றி யுலகம் படைத்தான் கவியாயினேற்கு" என்கிற பாசுரத்தினால் தம்மை பகவத்கவியாகவருளிச் செய்கிறார். ஆழ்வார்களுக்கும் ஆசாரியர்களுக்கும் இடையில், காலிதாஸர் பவபூதி பாரவி பட்டி பாணன் முதலான மஹாகவிகள் ப்ரஸித்திபெற்று விளங்கினர். அந்த கவிகளில் காலிதாஸர் மேன்மைபெற்று விளங்கினர். "புஷ்பேஷு ஜாதி: புருஷேஷு விஷ்ணு: நாரீஷு ரம்பா நகரீஷு காஞ்சீ...காவ்யேஷு மாக: கவிகாலிதாஸ:" என்று ஸாமாந்யர்கள் சொல்லிவரும் சுலோகத்தினாலும் காலிதாஸருடைய மேன்மைவிளங்கும். (கவிகளுக்குள்ளே காலிதாஸர் என்னும் பொருளில் 'கவிகாலிதாஸ:' என்று ஸமாஸம் சாஸ்த்ரீய மன்று. ஏதோபழமொழியாய் வழங்கிவரும் சுலோகமிது.)

"உபமா காலிதாஸஸ்ய" என்று இங்கே நாம் இட்டிருக்கிற தலையங்கம் அந்த மஹாகவியின் உண்மையான வொரு திறமையைத் தெரிவிக்கின்றது. அவருடைய கவிதைகளில் உபமாலங்காரத்தையிட்டுக் கூறாத சுலோகம் தேடிப் பிடிக்க வேண்டியதாகவேயிருக்கும். அவருடைய காவியங்களில் ஒன்றான ரகுவம்சத்தை முந்துற எடுத்துக் கொள்வோம். அதில்முதல் சுலோகத்தில் "ஜகத: பிதரௌ வந்தே பார்வதீ பரமேச்வரௌ" என்று தமது இஷ்டதேவதையான பார்வதீபரமேச்வரர்களுக்கு வணக்கம் செலுத்துகிற அவர் அந்த தம்பதிகளுக்கு "வாகர்த்தாவிவ ஸம்ப்ருக்தௌ" என்று உபமாகர்ப்பமான விசேஷணமிடுகிறார். அந்த திவ்ய தம்பதிகளின் அவிநாபாவத்திற்குச் சொற்பொருள்களின் அவிநாபாவத்தை உவமைகூறினது மிக மெச்சத்தக்கது. சொல்லை விட்டுப் பொருளையோ, பொருளை விட்டுச் சொல்லையோ பிரிக்க முடியாமலிருக்குந் தன்மை உலகமறிந்ததேயாயினும் அதைத்தகுந்த இடத்தில் உபயோகித்தது சாதுர்யமல்லவா? உபமேயபூதர்களான ஸ்த்ரீபுமான்களுக்குச்சேர, உபமான சப்தங்களும் (வாக், அர்த்த; என்று) ஸ்த்ரீபும்லிங்கங்களாகவே அமைத்ததும் ஒருவிசேஷம். "சப்தார்த்தாவிவ" என்றும் இயற்றலாமன்றோ. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் ஸ்ரீமஹாலக்ஷ்மீநாராயணர்களையுத்தேசித்து "அர்த்தோ விஷ்ணுரியம்வாணீ" (1-8-18) என்று பராசரமஹர்ஷி கூறியிருப்பது இங்கு நினைவுக்கு வருகிறது.

"வாகர்த்தாவிவ" என்ற சுலோகத்திற்கு மேலே "க்வ ஸூர்ய ப்ரபவோ வம்ச:" "மந்த: கவியச: ப்ரார்த்தீ" "அதவா க்ருதவாக்த்வாரே" என்ற மூன்று சுலோகங்களும் நைச்யாநுஸந்தானவகையில் அமைந்தவை. இவற்றிலும் உபமை அழகாகத் திகழ்கின்றபடி பாரீர். மஹாப்ராஜ்ஞர்கள் வருணிக்கவேண்டிய ஸூர்யவம்சத்தை அல்பஜ்ஞனான நான் வருணிக்கப் புகுவதானது, [திதீர்ஷுர் துஸ்தரம் மோஹாத் உடுபேநாஸ்மி ஸாகரம்] கடக்கவரிதான கடலைத் தெப்பக்கட்டையைக் கொண்டு கடக்க நினைப்பதோடொக்குமென்கை.

மஹாகவிகள் செய்யவேண்டிய காரியத்தை மந்தமதியான நான் கவியென்று புகழ் பெறுவதற்காகச் செய்யப் புகுவதானது [ப்ராம்சுலப்யே பலே லோபாத் உத்

பாஹுரிவ வாமந:] உன்னதபுருஷன் எட்டிப் பறிக்கவேண்டிய பழத்தைக் குள்ளன் பறிக்கக் கைநீட்டுவதுபோல் அபஹாஸ்யமாகும்.

இப்படிச் சொல்லி, காவியமியற்றுவதில் நின்றும் ஓய்ந்துவிடாமல் இயற்றப் புகுவது உரியதே யென்பதையும் ஒரு உபமையை யிட்டுத் தலைக்கட்டுகிறார். [மணௌ வஜ்ரஸமுத்கீர்ணே ஸூத்ரஸ்யேவாஸ்தி மே கதி:] துளைபட்ட ரத்னத்தில் நூலைக் கோப்பது எப்படி எளிதோ, அப்படியே முன்னோர் காட்டிய வழியிலொழுகுவது எளிதேயன்றோ என்றபடி.

இப்படி மேலும் மேலும் சுலோகங்களை வாசித்துக்கொண்டேபோனால் அற்புதமான உபமைகள் புலப்படும். இதிலேயே நான்காவது ஸர்க்கம் முதல் சுலோகத்தில் "திநாந்தே நிஹிதம் தேஜஸ் ஸவித்ரேவ ஹுதாசந:" என்று இட்டிருக்கும் உவமை காளிதாஸர் வேதமுமோதினவர் என்பதைக் காட்டுகின்றது. தைத்திரீய யஜுர் ப்ராஹ்மணத்தில் "அக்நிம் வாவ ஆதித்யஸ் ஸாயம் ப்ரவிசதி; தஸ்மாதக்நிர் தூராந் நக்தம தத்ருசே; உபே ஹி தேஜஸீ ஸம்பத்யேதே" என்று ஓதப்பட்டிருப்பது காண்க. இங்ஙனே காலிதாஸருடைய காவியங்களைப் பார்த்துக்கொண்டேசென்றால் உபமாலங்கார நறுமணம வீசாத இடம் காண்பதரிதேயாகும். ...

## வான்மீகி முனிவரும் - கம்பர் பெருமானும்

ஸ்ரீ வால்மீகி ராமாயணமும் கம்பராமாயணமும் தமிழ்நாட்டில் ஸமமாகக் குலாவப்படுவனவாம். கம்பர் தாம இராமாயணமியற்றத் தொடங்கும்போது "தேவபாடையி னிக்கதை செய்தவர் மூவரானவர் தம்முளு முந்திய நாவினுருரையின்படி நான் தமிழ்ப் பாவினாலி துணர்த்திய பண்பரோ" என்றார். இதன் கருத்தாவது—நான் தமிழ்ப்பாவினால் இவ்விராமாயணம் பாடியதானது வான்மீகி ராமாயணத்தைப் பெரும்பாலும் தழுவியே; ஸம்ஸ்க்ருத பாஷையில் ராமாயண மியற்றிய மஹர்ஷிகள் மூவர்; வால்மீகியும் வஸிஷ்டரும் போதாயனரும். அவர்களுள் எல்லாவகையினும் மேம்பட்டவர் வான்மீகியாவர். அவரியற்றிய ஆதிகாவ்யமான ஸ்ரீராமாயணத்தைத் தழுவி இந்நூலை யான் இயற்றுகின்றேனென்றவாறு. செய்யுளில் 'பெரும்பாலும்' என்ற சொல் இல்லையாயினும் கவியின் கருத்தை நோக்கி அது கூட்டிக் கொள்ளத் தக்கதே; வான்மீகி ராமாயணத்தில் இல்லாதனவும் அதனோடு முரண்பட்டனவுமான சிலபல கதைகளும் இதில் காணப்படுகின்றனவன்றோ?

வான்மீகி முனிவர் சுருங்கச் சொன்னதைக் கம்பர் பெருக்கிச் சொன்னவிடம் பல காண்கிறோம். இங்கு ஓரிடம் எடுத்துக் காட்டி அநுபவிப்போமாக. வான்மீகி ராமாயண பால காண்டத்தில் இருபத்தொன்பதாவது ஸர்க்கத்தின் கதைச் சுருக்கமாவது—விச்வாமித்ர முனிவர் ராமலக்ஷ்மணர்களோடு வழிநடந்து சென்றுகொண்டிருக்கையில் ஸ்ரீராமன் ஓர் அழகியசோலையைக் கண்டு வியந்து அதன் வரலாற்றைக் குறித்து மாமுனியை வினவ, அவரும் "ராம! ஸ்ரீமஹாவிஷ்ணு உலகத்தில் தவஞ்செய்யும் பொருட்டும் யோகத்தை அநுஷ்டிக்கும் பொருட்டும் இவ்வனத்தில்

நெடுங்காலம் வாஸஞ்செய்து கொண்டிருந்தனர். வாமனமூர்த்தி தவம் புரிந்திருந்த ஆச்ரமமும் இதுவே. இங்குக் காச்யபமாமுனியும் தவம் புரிந்து ஸித்தி பெற்றனர்; ஆனது பற்றி இது 'ஸித்தாச்ரமம்' என்று யதார்த்தமாகிய பேருடன் விளங்குகின்றது. வாமனனாய் அவதரித்து மாவலியை யாசித்து, த்ரிவிக்ரம ரூபங்கொண்டுதனது மெல்லடிகளாலே உலகங்களையளந்து யாவர்க்கும் நன்மையைச் செய்த ஸ்ரீமந்நாராயணன் இவ்வாச்ரமத்தில் முன்பு வஸித்திருந்தனன் என்பதே இவ்விடத்திற்கு முக்கியமான சிறப்பு. நானும் அவ்வாமனரூபியாகிய பகவானிடத்தில் பரம பக்தியைச் செய்து 'வாமனன் மண்ணிது' என்று இம்மண்ணை மோந்து கொண்டு அவனுடைய தான இவ்வாச்ரமத்தில் குடியிருக்கின்றேன். யாகத்தைக் கெடுக்கும் ராக்ஷஸர்கள் இவ்வாச்ரமத்திற்கே வருவார்கள். ராம! கொடிய அவ்வரக்கர்களை இவ்விடத்தில் தான் கொல்லவேண்டும் என்று சொல்லிக் கொண்டே போகையில், அந்த ஸித்தாச்ரமத்தில் வாஸஞ்செய்யும் முனிவர்களனைவரும் விச்வாமித்ரமாமுனிவர் வந்தது கண்டு உவந்து அவருக்கும் ராமலக்ஷ்மணருக்கும் ஸத்காரஞ்செய்தனர்.........என்பதாக. இதில் வாமனத்ரிவிக்ரமமூர்த்திகளின் ப்ரஸ்தாவம் லகுவாகச் செய்யப்பட்டுள்ளது. இதனை மிகவழகிய பலபாடல்களினால் கம்பர் விவரிக்கின்றார். இங்குச் சில செய்யுள்களைமட்டு மெடுத்துக்காட்டி யுரைசெய்து இன்புறுகின்றோம்.

**வாமனன் தவமியற்றத்தங்கியிருந்த சோலையின் சிறப்பைக் கம்பர் கூறல்**

தங்கணாயகரில் தெய்வந் தவம் பிறிதிலவென்றெண்ணும்
மங்கைமார் சிந்தைபோலத் தூயது மற்றுங்கேளாய்
எங்கணான் மறைக்கும் தேவரறிவிற்கும் பிறர்க்குமெட்டாச்
செங்கண்மாலிருந்து மேனாட் செய்தவஞ் செய்ததன்றே.

இச்சோலையில்தான் முன்பு திருமால் தங்கியிருந்து தவஞ்செய்ததென்று இடத்தின் பெருமை கூறினபடி. இதுவே ஸித்தாச்ரமமென்று வழங்குவது. இத்தலத்தின் தூய்மைக்குப் பதிவிரதைகளின் மனத்தூய்மையை உவமை காட்டினர். "ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோ யதா" என்றதொக்குமிது. மங்கைமாரின் மனத்தூய்மையைக் "கண்டாரிகழ்வனவே காதலன்தான் செய்திடினும், கொண்டானை யல்லாலறியாக் குலமகள் போல்" என்ற பெருமாள் திருமொழி பாசுரத்தினாலுமறிக. இத்தலத்துத் தவம்புரிந்த திருமாலின் தன்மையை "எங்கள் நான்மறைக்கு மெட்டா" என்கிறான் முனிவன்; *யதோ வாசோ நிவர்த்தந்தே' என்கிற உபநிஷத்தையும், *நான்மறைகள் தேடி யென்றுங் காணமாட்டாச்செல்வன்* என்ற திருமங்கையாழ்வா ரருளிச்செயலையும் அடியொற்றிச் சொன்னபடி யென்றுகொள்க.

**(திருமால் வாமனனானமை கூறுதல்)**

சீல நுணித்துணர் காசிபனென்னும், வாலறிவற் கதிதிக் கொருமகவாய்
நீலநிறத்து நெடுந்தகைவந்து, ஓராலமர்வித்தி னருங்குறளானான்.

கூரத்தாழ்வான் அருளிய அதிமாநுஷஸ்தவத்தில்* இந்த்ராநுஜத்வம் அதிதேஸ்த்நயத்வயோகாத்* என்பதனாலருளிச்செய்த உபேந்த்ராவதாரம் சொல்லிற்றிங்கு.

காசியப முனிவன் தனது மனைவியான அதிதியோடு கூடி அனேக வருஷகாலம் திருமாலைக்குறித்து விரதமொன்று நடத்தி முடித்தனன்; முடிவில் திருமால்தனக்கு வரந்தருவதாகக் கட்கூடாக வந்து நின்றனன்; அவனைத் துதித்து 'அசுரர்களை யடக்கும் பொருட்டு அதிதி தேவியினிடம் எனக்குப் புதல்வனாய்ப்பிறந்து உபேந்திரனாகி அமரர்களினிடரைப் போக்கவேணும்'' என்று வரம்வேண்டினன். திருமாலும் அவனது வேண்டுகோளுக்கிரங்கி அங்ஙனமே பிறந்து வாமனனாயினன்—என்னும் வரலாறுணர்க.

## (வாமனமூர்த்தியின் தோற்றமுரைத்தல்)

முப்புரிநூலினன் முஞ்சியன் விஞ்சை, கற்பதோர் நாவன் அனல்படு கையன்
அற்புத னற்புதரேயறியுந்தன், சிற்பத மொப்பதோர் மெய்க்கொடு சென்றான்.

பகவான் மஹாபலியிடத்துச் சென்றபோது கொண்ட கோலத்தை வடமொழியாளர்கள் பலவாறு கூறியிருக்கின்றார்கள்; ஒரு சுலோகம்—''கௌபீநம் கடிஸூத்ரஸீம்நி கடயந் மௌஞ்ஜீமபிவ்யஞ்ஜயந் க்ருத்திம் க்ருஷ்ணம்ருகஸ்ய வக்ஷஸி வஹந் ஆஷாடமப்ஸோப்பயந், ஸ்வாத்யாய ஸ்வரஸம்பதா பரிஷதாம் ப்ரீதிம் ஸமுத்பாதயந் யாச்ஞாயை பலியஜ்ஞவாட நிகடம் ப்ராப்தோ வடு: பாது ந:'' என்பது. இதனையே பெரும்பாலும் தழுவி இச்சிறு செய்யுள் அமைக்கப்பட்டது. முப்புரிநூலென்று அந்தணர்களணியும் யஜ்ஞோபவீதத்தைச் சொல்லுகிறது. வடமும் மூன்றாய், வடத்திற்புரியும் புரியில் நூலிழையும மூன்றாயிருத்தல் பற்றி முப்புரிநூலென்கிறது. முஞ்சியன்—குசம் காசம் போன்ற ஒரு வகைப் புல்லால் ஆக்கப்பட்ட அரைநாணை யுடையவனென்க. இது பிரமசாரிகட்கு உரியகோலங்களிலொன்று. விஞ்சை கற்பதோர் நாவன்—விஞ்சை—வித்யா; ப்ரஹ்மவித்யா என்றபடி. ''வெந்திறல் வாணன் வேள்வியிட மெய்தி அங்கோர் குறளாகி மெய்ப்மையுணரச் செந்தொழில்வேத நாவின் முனியாகி'' (பெரிய திருமொழி 11—4—5) என்றார் திருமங்கையாழ்வாரும். அனற்படு கையன்—அந்தணர்களின் வலக்கையில் அக்னியுள்ளதாக வேதம் கூறும்; ''ப்ராஹ்மணஸ்ய தக்ஷிணே ஹஸ்தே ஹோதவ்யம்'' என்று அச்சித்ரச்ருதி ஓதினது காண்க. அநவரதமும் ஸமிதாதாநம் முதலிய தீத்தொழில் பயிலுங் கையையுடையவனென்னவுமாம். அற்புதன்—இவ்வாற்றால் ஆச்சரியப் படத்தக்கவன். அற்புதரே யறியும் தன் சிற்பத மொப்பதோர் மெய்க்கொடு சென்றான்—அவனுடைய வடிவுக்கு அவனுடைய ஸ்வரூபத்தையே உவமை கூறினாராயிற்று. அத்புதஜ் ஞானவான்களுக்கே அறியத்தக்கதாய் மற்றவர்க்கும் அறிதற்கரிதானது அவன்றன்னுடைய ஞானசொரூபம்; அதை யொத்திருந்தது திருவடிவம். வேதாந்ததேசிகன் வரதராஜ பஞ்சாசத்தில் *யேநாதிரோஹதி மதிஸ் த்வதுபாஸகாநாம் ஸாகிம் த்வமேவ தவ வேதி விதர்க்க டோலாம்* என்றருளிச் செய்தது இங்கே நினைக்கத்தகும். அவ்விடத்து நமது உரையை நோக்குக.

## (வாமனமூர்த்தியை மாவலி எதிர்கொண்டு பெருமைப் படுத்தல்)

அன்றவன் வந்ததறிந் துலகெல்லாம், வென்றவன் முந்தி வியந்தெதிர்கொண்டான்
நின்றனின் அந்தணரில்லை நிறைந்தோய், என்றனினுய்ந்தவர் யாருள ரென்றான்.

மஹாபலி உலகங்களை யெல்லாம் வென்றவனுதலால் அவன் ஒருவரையும் லக்ஷியம் செய்பவனல்லன்; ஆயினும் வாமன மூர்த்தியின் பிரமதேஜஸ்ஸை நோக்கி வியந்தவனுகி இங்ஙனம் மரியாதை மிக்க வார்த்தைகளை மொழிந்தனன்.

(வாமனமூர்த்தி மஹாபலியைப் புகழ்தல்)

ஆண்டகை யவ்வுரை கூற வறிந்தோன், வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி
நீண்ட கையாயினி நின்னுழை வந்தோர், மாண்டவரல்லர் மாண்பில ரென்ருன்.

பகவானை* அர்த்திதார்த்த பரிதாந தீக்ஷிதனென்று சொல்லுவது; மாவலியையோ வென்னில்* அர்த்திதாப்யதிகதாநதீக்ஷிதனென்பது. இவ்வேற்றத்தை யெடுத்துரைத்த வாமனமூர்த்தி 'மாவலீ! உன்னிடம்யாசிக்க வருபவர்களே மிகச் சிறந்தவராவர்; மற்றையோர் மாண்பிலர்' என்று கூறினன்.

(வாமனன் மூவடிமண் வேண்டிப்பெற, சுக்கிரன் தடுத்தல்)

சிந்தையுவந் தெதிரென்செய வென்ருன், அந்தணன் மூவடி மண்ணருளுண்டேல்
வெந்திறலாயிது வேண்டுமெனுமுன், தந்தனெனென்றனன் வெள்ளி தடுத்தான்.

திருமங்கையாழ்வார் பெரிய திருமடலில் "தன்னுருவமாருமறியாமல் தானங்கோர், மன்னுங்குறளுருவின் மாணியாய், மாவலிதன் பொன்னியலும் வேள்விக்கண் புக்கிருந்து, போர் வேந்தர் மன்னை மனங்கொள்ள வஞ்சித்து நெஞ்சுருக்கி, என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடிமண், மன்னுதருகென்று வாய்திறப்ப, மற்றவனுமென்னுல் தரப்பட்டதென்றலுமே" என்றருளிச் செய்துள்ள கண்ணிகள் இங்கே யனுஸந்திக்கத் தக்கன. ... ... ...

(சுக்கிரன் தடுத்துக் கூறிய வார்த்தை இன்னதென்பது)

கண்ட திறத்திது கைதவ மைய, கொண்டல்நிறக் குறளென்பது கொள்ளேல்
அண்டமு முற்று மகண்டமு மேனுள், உண்டவனுமி துணர்ந்துகொளென்ருன்.

"மிக்க பெரும்புகழ் மாவலி வேள்வியில், தக்கதிதன்றென்று தானம்விலக்கிய சுக்கிரன்" என்ற பெரியாழ்வார் திருமொழியை இங்கு உணர்க. சுக்கிரன் தபோபலத்தினுல் ஞானக்கண் பெற்றவனுதலால் கடவுளின் மாயையை யறிந்து 'திருமாலே தனது மாயத்தால் தன்னுருவத்தை மறைத்து உன்னை வஞ்சிக்க இங்ஙனம் வாமனனுக வந்திருக்கின்ருன; இவனுக்குத் தானஞ் செய்யாதே; செய்தால் உடனே உனக்கு அபாயமே யாகும்" என்றனன். சுக்கிரன் மாவலிக்குப் புரோஹிதனென்னும் முறையில் தெரிவித்தது இது. கண்ட திறத்து என்பதற்கு — ஆலோசித்துப் பார்க்குமளவில் என்று உரைத்தலுமாம். பின்னடிகள் "அண்டரண்ட பகிரண்டத் தொருமாநில மெழுமால்வரை முற்றுமுண்டகண்டம்" என்ற திருப்பாணுழ்வார் பாடலைத் தழுவியவை. பிரளயக்கடலில் திருமால் பேதைக்குழவியாய்ச் சிறிய தோராலந்தளிரில் உலகங்களையெல்லாம் தனது திருவயிற்றிலே அடக்கிவைத்துக் கொண்டு அறிதுயிலமர்கின்றனனென்பது நூற்கொள்கை. "அம்பரமும் பெரு

நிலனும் திசைகளெட்டும் அலைகடலுங் குலவரையு முண்டகண்டன், கொம்பமரும் வடமரத்தினிலைமேல் பள்ளி கூடினன்'' என்றும், ''மஞ்சாடுவரை யேழுங் கடல்களேழும் வானகமும் மண்ணகமும் மற்றுமெல்லாம், எஞ்சாமல் வயிற்றடக்கி ஆலின்மேலோரிளந்தளிரிற் கண்வளர்ந்தவீசன்'' என்றும் திருமங்கையாழ்வாருமருளிச்செய்தார். 'நளிர்மதிச் சடையனும் நான்முகக் கடவுளும், தளிரொளியிமையவர் தலைவனு முதலா, யாவகை யுலகமும் யாவருமகப்பட, நிலநீர்தீகால் சுடரிரு விசும்பும், மலர்சுடர்பிறவும் சிறிதுடன்மயங்க, ஒரு பொருள் புறப்பாடின்றி முழுவது மகப்படக் கரந்து, ஓராலிலைச் சேர்ந்த எம்பெருமாமாயன்'' என்பது நம்மாழ்வார் திருவாசிரியப்பா.

## (சுக்கிரன் சொல்லுக்கு மாவலி கூறின மறுமொழி)

நினைக்கிலை யென்கை நிமிர்ந்திட வந்து, தனக்கினியலாவகை தாழ்வது தாழ்வில்
கனக்கரியானது கைத்தலமென்னின், எனக்கிதன் மேல்நலம் யாதுகொ லென்றான்.

ஸர்வோத்தமனான ஸர்வேச்வரன் தானே தனது பெருமைகளையெல்லா மிழந்து என்னிடம் இரப்பாளனாய் வந்து ஒரு பொருளை வேண்டுவானானால் அவனுக்கு அதனைக் கொடுத்துப் பெருமை பெறுவதைவிடமிக்க சிறப்பு எனக்கு வேறொன்றுளதோ வென்றான். முதலடியில் 'நினக்கிலை' என்றும் பாடம் காண்கிறது; நினக்கு இலை—இவ்வறிவு உனக்கு இல்லையே யென்றபடி. ... ...

வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர், வள்ளியராக வழங்குவதல்லால்
எள்ளுவ வென்சில வின்னுயிரேனும், கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால்.

இப்பொழுது இரப்பாளனாக உன்னிடம் வந்தவன் ஸர்வேச்வரனாதலால் அவன் கேட்டதைக்கொடுத்தல் கூடாது, என்பாயாயின், எதைக்கேட்டாலுங் கொடுப்பது உதாரர்களுக்கு உரியகுணமாதலால் அதுவும் இசையத் தகாதது என்கிறான் மாவலி; வெள்ளியை என்பதில் சிலேடையுள்ளது. வெள்ளி யென்னும் பெயரையுடையாய் என்பது மேலெழுந்த பொருள்; அறியாமையை யுடையாய் என்பது முக்கியமான பொருள். வெண்மையாவது அறிவு முதிராமை; புல்லறிவுடைமை. 'வெள்ளியையாதல் விளம்பினை' என்பதில், நீ பொன்னாயின் இங்ஙனஞ்சொல்லமாட்டாய் என்றும் ஒரு கருத்துத் தொனிக்கும். ... ... ...

மாய்ந்தவர் மாய்ந்தவரல்லர்கள் மாயாது, ஏந்திய கைக்கொடு இரந்தவரெந்தாய்
வீந்தவ ரென்பவர் வீந்தவரேனும், ஈந்தவரல்ல திருந்தவர் யாரே.

இதனால் யாசகத்தொழில் செய்வது மரணவேதனையினுங் கொடிதென்பதும், தானஞ்செய்வது என்றுமழியாத புகழுடைமைக்குக் காரணமென்பதும் விளக்கப்பட்டது. இரந்து உயிர்வாழ்வார் உயிரோடிருப்பினும் இறந்தவர்களே; ஈந்துவாழ்ந்தார் உயிர்இறப்பினும் உயிரோடிருப்பவர்களே யென்பது கருத்து. இங்கு இரப்பாளனை வாமனமூர்த்திக்கு நிந்தை தோன்றினாலும் அதில் கண்ணோட்டமில்லை; தானஞ்செய்வதைப் புகழ்வதில் மட்டுமே நோக்கு. தான் தானஞ்செய்யாதிருக்க முடியாதென்பதை வற்புறுத்திக் கூறியவாறு. ... ...

எடுத்தொருவருக் கொருவ ரீவதனின் முன்னே,
தடுப்பது நினக்கழகிதோ தகவில் வெள்ளி
கொடுப்பது விலக்கு கொடியோ யுனது சுற்றம்,
உடுப்பதுவு முண்பதுவு மின்றி விடுகின்ருய்.

(தனது குருவாகிய சுக்கிரனை இங்ஙனம் இடித்துக் கூறுதல் பொருந்துமோ வெனின்; 'குரோரபி அவலிப்தஸ்ய கார்யாகார்யமஜாநத:' உத்பதம் ப்ரதிபந்நஸ்ய ஸத்யஸ்த்யாகோ விதீயதே' என்பது சாஸ்த்ரம். குருவாயிருந்தாலும் கார்யாகார்ய விவேகமின்றித் தீயவழியிற் செல்வானுயின் அவனை விட்டொழிப்பது நன்று என்ற வாறு. ஆகவே இது பொருந்தும்.)

## (வாமனமூர்த்தி ஓங்கி வளர்தல்)

கயந்தரு நறும்புனல் கையில்தீண்டலும்,
பயந்தவர் களுமிகழ் குறளன் பார்த்தெதிர்,
வியந்தவர் வெருக்கொள விசும்பி னோங்கினன்
உயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே.

சுக்கிரன் தடையைப் பொருள்படுத்தாமல் மாவலி தாரைவார்த்துக் கொடுத் ததும் வாமனன் பேருருவங் கொண்டனன். 'பயந்தவர்களு மிகழ் குறளன்' என்றது சித்திரக்குள்ளன் என்பதைக் காட்டும். குறளன் ஓங்கி வளர்ந்ததற்கு உவமை— உயர்ந்தவர்க்குதவியவுதவி. செய்தவுதவி சிறிதாயினும் தக்கார் கைப்பட்டவாறே மிகவோங்கி வளருமன்றே. ... ... ...

## (திருமால் மாவலி முடிமேற் பாதம் வைத்தது)

உலகெலா முள்ளடி யடக்கி யோரடிக்கு, அலகிலா தவ்வடிக் கன்பன் மெய்யதாம்
இலைகுலாந் துழாய்முடி யேகநாயகன், சிலைகுலாந்தோளினுய் சிறியன் சாலவே.

ஒண்மிதியிற்புனலுருவி யொருகால்நிற்ப ஒருகாலுங் காமருசீரவுணனுள்ளத் தெண்மதியுங் கடந்தண்டமீதுபோகி இருவிசும்பினூடு போயெழுந்து மேலைத்தண் மதியுங் கதிரவனுந் தவிரவோடித் தாரகையின் புறந்தடவி அப்பால்மிக்கு மண் முழுதுமகப்படுத்து நின்ற வெந்தையான திருமால் எல்லா வுலகங்களையும் இரண்டடி யாலளந்து விட்டு, 'மூன்றடி தருகிறேனென்றாய் மற்றையோரடிக்கு இடங்காட் டாய்' என்ன, அதற்கு அடியேனது முடியே உள்ளது. என்று மாவலிகூற, எம்பெரு மான் அவனது சிரசிற்பாதத்தை வைத்தழுத்தி அவனைப்பாதாளத்திற் செலுத்தினு னென்ற வரலாறு அறிக. ஆனதுபற்றியே பாதாளத்திற்கு "பலிஸத்ம" என்றுபெயர்; "அதோபுவநபாதால பலிஸத்மரஸாதலம்" என்றுன் அமரஸிம்ஹன். *ஒருகுறளா யிருநில மூவடிமண் வேண்டி உலகனைத்து மீரடியாலொடுக்கி, ஒன்றுந்தருகவென மாவலியைச்சிறையில் வைத்த தாடாளன்* என்றார் திருமங்கைமன்னனார். இத்தனை பெருமையைச்சொல்லி, முடிவில் 'சிறியன் சாலவே' என்றது மிகவழகிய பேச்சு. அவன் அறப்பெரியனுயிருந்தும் சிறியனுகவே காணப்படுகிறானென்றபடி. சிறியை யாய்க் காணப்படுகின்ற நீயன்றோ இத்தனையுஞ் செய்தது என்று குறிப்பித்தபடி.

# அடியேனது ஸந்தேசத்தை ஆதரித்ததற்கு ஆனந்தம்

(பாதுகாபத்ராதிபர் விஷயம்)

ஒரு கிழவர் "ஸ்ரீமதே நாராயணு ஸ்ரீமதே நாராயணு" என்று ஓயாமல் சொல்லிக்கொண்டிருந்தார் அதைக்கேட்ட பலரும் அவரையணுகி "ஸ்வாமிந்! இப்படிச் சொல்லக்கூடாது; ஸ்ரீமந் நாராயணு! என்று சொல்லும்; ஸ்ரீமதே நாராயணுய நம: என்றுவது சொல்லும்; ஸ்ரீமதே நாராயணு என்பது பரிஹாஸ்யம் என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். அதற்கு அவர், "இது தப்போ ஸரியோ எனக்குத் தெரியாது. என் தகப்பனுர் சிறந்த வித்வான்; அவர் இப்படித்தான் சொல்லிக் கொண்டிருந்தார்; அவரை யாரும் பரிஹஸிக்கவில்லை; என்னைப் பரிஹஸித்தால் பரிஹஸியுங்கள்" என்று சொல்லிவந்தார். அந்தக் கிழவருடைய திருக்குமாரர் புகழ்பெற்ற வித்வான்; அவர் தகப்பனுரைத் திருந்தப் பார்த்தும் அவர் திருந்தாமையினுல் எல்லார்க்கும் ஒன்று சொல்லத் தொடங்கினுர்; ஸ்ரீமதே! நாராயணு என்று சொல்லுவதில் யாதொரு பிழையுங் கிடையாது; ஸ்ரீமதே என்பது சதுர்த்தியன்று; ச்ரியாம் மதி: யஸ்ய ஸ:—ஸ்ரீமதி:. (அதன் ஸம்புத்தி – ஸ்ரீமதே! என்பது.) தன் எண்ணத்தை யெல்லாம் பிராட்டி யிடத்திலேயே வைத்திருக்கும் நாராயணனே! என்று பொருளாதலால் இதை யறியாதவர்கள் பழித்தால் பழிக்கட்டுமே என்று சொல்லிவந்தார் திருக்குமாரர்.

இந்த இதிஹாஸத்தை அடியேன் ஸ்ரீரங்கநாத பாதுகாபத்திராதிபர்க்குத் தெரிவித்து "தேவார் பக்தி சித்தாநந்தப்ரதாயிநீ என்பதைத் திருத்தவேண்டா; பக்த: சித்தம் யேஷாம் தே–பக்தி சித்தா:; (பக்தியை ஹ்ருதயத்திலே யுடையவர்கள் என்றபடி.) தேஷாம் ஆனந்த ப்ரதாயிநீ—என்று எளிதாகப் பொருள் கொள்ளலாமாகையால் திருத்தம் வேண்டா. "விஷ்ணு: சித்தே யஸ்ய ஸ: – விஷ்ணு சித்த:" என்பதுபோல பக்திசித்தபதமும் நிரவத்யமே யாகும்." என்று சில நண்பர் மூலமாக ஸந்தேசம் விடுத்தேன்.

இதைக்கேட்ட பத்ராதிபர்—இன்னும் பல ஸமாஸஸரணிகளையும் நான் ஆலோசித்திருந்தேன்; இதுவும் ஒருஸரணிதான், இதையே ஆதரிக்கிறேன்; எப்படியும் திருத்தவேண்டிய ஆவச்யகதையில்லை யென்பது கல்வெட்டு—என்று ஸாதித்தாரம். ஓம் சாந்திச் சாந்திச் சாந்தி:. ... ... ...

# பிள்ளை யென்கிற சொல்லின் விமர்சம்

பிள்ளையென்கிற சொல்லை உலகில் பெரும்பாலும் மகன் புத்திரன்என்கிற பொருளில் வழங்கிவருகிறுர்கள். "இவன் என்னுடையபிள்ளை, இவன் அவருடைய பிள்ளை" என வழங்கிவருவதைப் பெரும்பாலுங்காண்கிறும்-இவ்வழக்கு நூல்களில் ஏறியுள்ளதாவென்று பார்க்கவேணும். பிள்ளைஎன்கிறசொல் அருளிச்செயல்களில் அபரிமிதமாக வருகின்றது. மகன்என்னும் பொருளில் அச்சொல் பிரயோகிக்கப்பட்டுள்ளதாவென்று ஆராயவேணும். "தன்னேராயிரம் பிள்ளைகளோடு" "பிள்ளைகள் செய்வனசெய்யாய்" "பண்டுமிப்பிள்ளைபரிசறிவன்" 'பால்வாய்ப்பிறைப்பிள்ளை' "பிள்ளையுருவாய்த்தயிருண்டு" 'புள்ளுப்பிள்ளைக்கிரைதேடும்' என்பனபோன்ற

விடங்களில் மகனென்கிறபொருள் இல்லை சிறுமையைக்காட்டுஞ் சொற்களேயா மிவை. "பள்ளியிலோதிவந்த தன் சிறுவன் வாயிலோராயிரநாமம், ஒள்ளியவாகிப் போத ஆங்கதனுக்கொன்று மோர்பொறுப்பிலனாகிப், பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண்புடைப்ப" என்ற திருவல்லிக்கேணிப் பாசுரத்தில் "பிள்ளையைச் சீறி" என்ப தற்கு 'மகனைச் சீறி' என்றே பொருள் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தமில்லை; 'பள்ளி யிலோதிவந்த தன் சிறுவன்' என்ற முதலடிக்கு ஏற்ப, 'சிறுவனைச் சீறி' என்றே பொருள்படலாம்.

உலகில் "அவள் பிள்ளை பெற்றாள்" என்று ஒருவர் சொன்னவுடனே 'ஆணா, பெண்ணா?' என்று கேள்வி பிறக்கிறது. 'ஆண்பிள்ளை, பெண்பிள்ளை' என்ற வழக்கி னாலும் பிள்ளை யென்கிற சொல் வடமொழியில் 'ப்ரஜா, அபத்யம்' இத்யாதிகளான சொற்கள்போலே ஸந்தான ஸாமாந்யவாசகமாகத் தேறுமேயல்லது புத்ரபர்யாய மாகத் தேறாது. புத்திரனென்று சொல்லவேண்டில் 'உன்னை யென்மகனே யென்பர் நின்றார்' 'ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார்' 'என் மகன் கோவிந்தன்' 'ஏமருதோ னென்புதல்வன்' என்றாற்போலே சிறப்புச் சொல்லையிட்டே சொல்லவேணும். 'என்று மென்பிள்ளைக்குத் தீமைகள் செய்வார்கள்' என்ற பெரியாழ்வார் திருமொழி யில் 'என் மகனுக்கு' என்ற பொருளில் 'என் பிள்ளைக்கு' என்று வந்திருக்கிறதே யென்னில்; அதுவும் 'என் சிறுக்குட்டன் எனக்கோ ரின்னமு தெம்பிரான்' என்ற விடத்திற்போல ,என் சிறுக்கனுக்கு' என்றபடியே யாகும். இளமைப் பருவத்துப் பேச்சுக்களைவிட்டு 'இன்னார் இன்னாருடைய மகன்' என்று தெரிவிக்குமிடங்களில் பிள்ளை யென்னுஞ் சொல் நூல்களில் பிரயோகிக்கப்பட்டுள்ளதா வென்று தேட வேணும். 'பேய்ச்சி முலையுண்டபின்னை இப்பிள்ளையைப் பேசுவதஞ்சுவனே' 'கண புரங்கைதொழும் பிள்ளையைப் பிள்ளையென்றெண்ணப் பெறுவரே' 'பண்டுமிப் பிள்ளை பரிசறிவன்' 'இளம்பிள்ளை கிள்ளியெழுப்பி' 'பிள்ளைகளெல்லாரும் பாவைக் களம் புக்கார்' 'பிள்ளாய் யெழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு,' 'முற்றிலாத பிள்ளைக ளோம்' 'இம்மாயம் வல்ல பிள்ளை நம்பி உன்னை யென்மகனே யென்பர் நின்றார்.' ........இத்தகைய பல பாசுரங்கள் நினைவுக்கு வருகின்றன. சில அகராதி நிகண்டு களில் 'பிள்ளை — மகன்' என்று காணப்படினும் அது உலகவழக்குக்குச் சேர்ந்ததா மித்தனை, உலக வழக்கை மறைக்கவோ மறுக்கவோ முடியாது. நூல் வழக்கி லுண்டாவென்பதே விசாரம். இத்தனையும் பூர்வபக்ஷ கோடியிலே யாகக்கடவது; ஸித்தாந்த முணர்த்துகிறோம். தேசிகன் பணித்த குருபரம்பராஸாரத்தில்— *இவ்வாசார்யர்களில் ஈச்வரமுனிகள் பிள்ளை நாதமுனிகள் ......நாதமுனிகள்பிள்ளை ஈச்வரபட்டாழ்வான். ஈச்வரபட்டாழ்வான்பிள்ளை ஆளவந்தார்...... ஆளவந்தார் பிள்ளை சொட்டை நம்பி. சொட்டைநம்பி பிள்ளை என்னாச்சான். என்னாச்சான் பிள்ளைகள் நால்வர்* இத்யாதி. இவ்விடங்களில் மகன் என்னும் பொருளிலேயே பிள்ளை யென்கிற சொல் பிரயோகிக்கப்பட்டுள்ளதென்றுணர்க. ... *

## அன்பர்களுக்கு அறிக்கை.

இவ்வருஷத்தின் கடைசி ஸஞ்சிகை இதுவேயாகும். அடுத்த ஸஞ்சிகை புது வருஷத்தின் முதல்ஸஞ்சிகையாகும். அதாவது இருபத்தேழாவது ஸம்புடத்தின்

முதல் மலராகும். பன்னிரண்டு ஸஞ்சிகைகள் வெளிவந்துவிட்டால் ஓராண்டு பூர்த்தியென்றுகொள்க. எனவே, இச் சஞ்சிகையோடு பன்னிரண்டு ஸஞ்சிகைகள் வெளிவந்தாயின. சென்ற ஸ்ரீ ராமாநுஜனில் பிரசுரம் செய்திருந்தபடி அண்ணு ஸ்வாமி யுபந்யாஸ மாலையின் முதலிதழும் இரண்டாமிதழும் வெளிவந்துவிட்டன.

—பத்ராதிப ப்ரதிநிதி.

# எனது இரவு நினைவுகள் (P. B. A.)

அடியேனுடைய இளமையில் ஸன்னிதி வீதியில் வானமாமலை மடத்தில் ஸம்ஸ்க்ருதபாடசாலையொன்று பிரபலமாக நடந்துகொண்டிருந்தது. அக்காலத்தில் ஆங்கிலப் பள்ளிக்கூடம் ஏதும் காஞ்சியில் கிடையாததலால் இந்த வானமாமலை மடத்துப் பாடசாலை மிகவும் மேன்மையாக நடந்துவந்தது. காவ்யநாடகாலங்காரங்களுடன் நான்கு சாஸ்த்ரங்களின் ப்ரவசனமும் நடைபெற்றுவந்தது. உபாத்யாயர்கள் மட்டும் பத்து திருநாமங்கள் இருந்து வந்தார்கள். அவர்களில் வித்யாசார் என்றும, கிரித்ராசார் என்றும் மாத்வ வித்வான்கள் இருவர் இருந்தார்கள். வித்யாசார் என்பவர்க்கு வித்யாதீசாசார் என்பது முழுப் பெயர். வித்யாசார் என்றே வழங்கப்படுவர். இவர்க்கு ஜியேஷ்டப்ராதா ராமசந்திராசார் என்பவர். தேவப்பெருமாள் ஸன்னிதிக்குள் வஸந்தோத்ஸவ பங்களாவில் வெகுகாலம் நடந்துவந்த சடகோப நிலயமென்னும் பாடசாலையில் அந்த ராமசந்த்ராசார் உபாத்யாயராக இருந்துவந்தார். அவர் நையாயிகர். நேத்ரபாடவமில்லாதவர். பிறவிக்குருடர் எனறுகூட அவரைச் சொல்லிக்கொண்டிருந்தார்கள். நானும் அந்தப்பாடசாலையில் சிலவாணடுகள் வாசிக்க நேர்ந்தது. அந்த ராமசந்த்ராசாரிடத்தில் ஏழெட்டு வித்யார்த்திகள் நியாயபாடம் வாசிக்கக் கண்டிருக்கிறேன். தலைகுனிந்தபடியேயிருந்து கண்ணை மூடிக்கொண்டே பாடஞ் சொல்லுவர். அப்போது எனது வயது பதினன்குக்கு உட்பட்டது. அவருடைய கநிஷ்டப்ராதாவான வித்யாசார் என்பவருடைய பழககமே எனக்கு அதிகம். இவர் வானமாமலைமடத்துப் பாடசாலையில் சிறிது காலமும, ஸ்ரீஜகத்குரு காதி ஸ்வாமிகள் அண்ணு ஸன்னிதியில் ஸ்தாபித்திருந்த வேதாந்த வைஜயந்தி யென்னும் பாடசாலையில் அதிககாலமும் உபாத்யாயராக இருந்துவந்தார். இவர் காவ்யநாடகாலங்காரங்களில் மஹாநிபுணர். அரசாணிபாலை வேங்கடாத்வரியின் க்ருதிகளான விச்வகுணதர்சம், வரதாப்யுதயம், உத்தரசம்பூ, லக்ஷ்மீ ஸஹஸ்ரம் முதலானவையெல்லாம் இவர்க்கு வாசோவிதேயம். புத்தகம் பாராமலே ப்ரவசனம் செய்துவந்தவர். வியாக்கியானத்திலுள்ள விஷயங்களையெல்லாம் விடாமல் எடுத்துக் கூறுவர். மேலே குறித்த க்ரந்தங்களையெல்லாம் இவரிடத்தில் நான் பாடங்கற்றேன். அப்போது திருத்தகப்பனரும் ஓர் உபாத்யாயராக எழுந்தருளி யிருக்கச்செய்தேயும் (திருநக்ஷத்ரம் நாற்பத்துமூன்றுக்குள்ளாகவே யிருக்கச் செய்தேயும்) திருமேனியில் ஏதோ அநாரோக்யம் ஏற்பட்டு வெளி ஸஞ்சாரம் குறைந்து திருமாளிகையிலேயே பாடப்ரவசனங்கள் செய்துகொண்டிருக்க நேர்ந்தது. அப்போது எனக்கு ஸஹாத்யாயிகளாக இருபது பிள்ளைகள் தேறுவர்கள். அன்னவர்களில் ஒருவர்கூட இப்போது இல்லாமையை நினைக்குமபோது எவ்வளவோ துக்கமுண்டாகிறது ஸமவயஸ்கர்கள் சிலர்; தாழ்ந்த வயதினர் சிலர். இவர்களில் ஒருவரையுங் காணப் பெற்றிலேனிப்போது. ஒருவேளை விவாஹம், ஒரு

வேளை உபநயனம் என்பதையும் அப்போது கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. சிகையில்லாத பிராமணப் பிள்ளைகளையும் எந்த வகுப்பிலுங் கண்டதில்லை. சக்ரவர்த்தி திருமகனார் பித்ருவாக்ய பரிபாலநார்த்தமாக வனவாஸஞ் செய்தபோது தண்டகாரண்ய ப்ராந்தங்களை யெல்லாம் பார்த்திருந்தவர், மீண்டும் வெகுகாலங்கழித்து சம்புகவதத்திற்காக அந்தவிடங்களுக்கு எழுந்தருள நேர்ந்தபோது முன்கண்ட ஸந்நிவேசங்களும் அப்போது காணும் ஸந்நிவேசங்களும் மிகமிக மாறுபட்டிருப்பதைக் கண்டு சொல்லுவதை உத்தரராமசரித நாடகத்தில் பவபூதிமஹாகவி கூறுகின்றார்—"புரா யத்ர ஸ்ரோத: புலிநமதுநா தத்ர ஸரிதாம் விபர்யாஸம் யாதோ கநவிரலபாவ: க்ஷிதிருஹாம்" இத்யாதி. முன்பு ஆறுகளில் பெருவெள்ளங்கண்டவிடங்கள் இப்போது மணல்மேடிட்டுக் கிடக்கின்றன; மரங்கள் அடர்ந்திருந்தவிடங்களும், மரம் ஒன்றுமில்லா திருந்த விடங்களும் தலைகீழாய்விட்டன வென்கை. அதேபோல் தான் நமது காஞ்சீபுரியின் நிலைமையுள்ளது.

காஞ்சீபுரியென்று விசேஷிக்க வேண்டியதில்லை; எந்தவூரையெடுத்துக் கொண்டாலும் இத்தகைய மாறுபாடுகள் அபரிமிதமாகவே காணப்படுகின்றன. முன்பு வைதிகபூயிஷ்டங்களாயிருந்த அக்ரஹாரங்கள் இப்போது லௌகிகபூயிஷ்டங்களாகக் காணப்படுவதுபோல், முன்பு லௌகிக பூயிஷ்டங்களாயிருந்த ஊர்கள் இப்போது வைதிக பூயிஷ்டங்களாகக் காணப்படலாமே; அதுதானில்லை.

ஸ்ரீஜகத்குரு காதி ஸ்வாமி ஐம்பது வருஷங்களுக்குமுன்பு கஜதுரகபதாதிகளுடன் தென்னாட்டுத் திருப்பதி யாத்திரை செய்தருளினபோது இருபது முப்பது ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுசரர்களாக இருந்தனர். அப்போது அடியேனும் சிலமாதங்கள் தேவப்பெருமாளை மறந்து அந்த யாத்திரையில் அந்வயித்திருந்தேன். வண்டிகளிலேயே யாத்திரையாதலால் ஒவ்வோரிடத்தையும் நன்கு காணவும் அநுபவிக்கவும் நேர்ந்தது. இராக்காலங்களில் பயணஞ்செய்தாலுங்கூட தர்சநீயமான இடங்கள் வரும்போது வண்டிகளைநிறுத்தச்செய்து கீழிறங்கிப்பார்த்துக்கொண்டே போவதுண்டு. திருக்குடந்தையருகில் ஓர் அக்ரஹாரம். (பெயர் நினைவுக்கு வரவில்லை.) பின்மாலை நாலுமணிக்கு அங்கே ஒரு பெரியவீதிவழியே எமது வண்டிகள் சென்றுகொண்டிருக்கின்றன. அந்தவீதிமுழுவதும் ப்ராஹ்மணவீதி, ப்ராஹ்மணர்களென்றால் ஜாதிப்ராஹ்மணர்களல்ல. வேதமோதின ப்ராஹ்மணர்கள். கனபாளகடினா ஸ்மார்த்தர்கள் வஸிக்கும்வீதிஅது. பெரும்பாலும் க்ருஹந்தோறும் வாசல்திண்ணைகளில் ஸ்வாத்யாய ப்ரவசனங்கள் நடந்து கொண்டிருக்கின்றன. க்ருஷ்ணயஜுர் வேதம், சுக்லயஜுர் வேதம்,ருக்வேதம், ஸாமவேதம் எல்லாம் அந்தப் பெரியவீதியில் ஓதப் படுகிறது. ஸம்ஹிதை, பதம், க்ரமம், ஜடை, கனம், ப்ராஹ்மணம் எல்லாம் ஓதப்படுகின்றன. திருமங்கையாழ்வார் திருவாலிதிருநகரியைப் பாடும்போது "சந்தி வேள்வி சடங்குநான்மறை ஓதியோதுவித்தாதியாய்வரும் அந்தணாளரறு அணியாலி" என்கிறார். திருக்கோவலூரைப் பாடும்போது "மறைவளரப் புகழ்வளர மாடந்தோறும் மண்டபமொண்டொளியனைத்தும் வாரமோத" என்கிறார். தேரழுந்தூரைப் பாடும்போது "முதுநான்மறை வீதிதொறும் அலையாருங்கடல்போல் முழங்குந்தென்னழுந்தை" என்கிறார். திருக்கண்ணங்குடியைப்பாடும்போது "அங்கமாறைந்து

வேள்வி நால்வேதம் அருங்கலைபயின்று எரிமூன்றுஞ் செங்கையால் வளர்க்குந் துளக்கமில்மனத்தோர் திருக்கண்ணங்குடி'' என்கிறார். இவ்வோபாசுரங்களிற் கூறிய பெருமைஇப்போதும் கட்கூடாகக்காணப்படுகின்றதேயென்று ஆனந்தம் பொங்கப்பேசிக்கொண்டே அந்த அக்ரஹாரவீதியில் உலாவினேன். அங்கு ஸமீபத்தில் காவேரியின் கிளையாறு ஒன்று பெருகுகின்ற தென்றார்கள். (பின்மாலை ஐந்து மணிக்கு) அவ்வாற்றங்கரைக்குச்சென்றோம். அங்குப் பலவிடங்களில் ப்ரஹ்மயஜ்ஞ கோஷம் செவிப்பட்டது. மூவர்நால்வர் சேர்ந்து ஓதுமிடங்களையும் பார்த்தோம்; இருபது முப்பது ச்ரோத்ரியர்கள் சேர்ந்து ஓதுமிடங்களையும் பார்த்தோம். அப்போது நான் வேதாத்யயனம செய்து முடித்தஸமயம். என்னோடு கூட அத்யயனம் செய்தவர்களும் அப்போது கூடவந்திருக்கிறார்கள். அன்னவர்களில் இப்போது இருவர்மட்டுமே ஜீவித்திருக்கின்றனர்; (உபயவேதகண்டீரவமென்று விருதுபெற்ற) ஸ்ரீஉ.வே. தி. வி. சிங்கராசாரியர் ஒருவர். திருவாலி. கனபாடி ராஜகோபாலாசாரியரென்பவர் மற்றொருவர். அந்த காலத்தை நினைக்க மனம் மூடமாகிவிடுகிறது.

---

(2)

என்னிளமையில் திருத்தகப்பனார் ஒவ்வொருநாளும் ஒவ்வொருகதையைச் சொல்லி 'இதைஸம்ஸ்க்ருதத்தில் மொழிபெயர்த்துக் கொண்டுவா' என்றுநியமிப்பர். அக்கதைகள் ஹாஸ்யக்கதையாகவுமிருக்கும், பக்திக் கதையாகவுமிருக்கும். நேற்றிரவு நினைவுக்குவந்த ஒருகதையைக்கேளீர். ஒரு வித்வானுக்கு ஒரேபெண்இருந்தாள். அவளுக்கு ஸம்ஸ்க்ருதம் கற்பித்திருந்தார் தகப்பனார். அப்பெண்மணிக்கு விவாஹ யோக்யமான வயதுவந்தது. தகப்பனார் ஸம்ஸ்க்ருதவித்வானாகையாலே வித்யாபக்ஷபாதியாய் 'இப்பெண்ணை ஸம்ஸ்க்ருதம்வாசித்தவனுக்கே கொடுக்கக் கடவேன்' என்று உறுதிகொண்டிருந்தார். 'எனது குமாரனுக்கு உமது பெண்ணைக்கொடுக்க வேணும்' என்று பலர்வந்து அபேக்ஷிப்பர்கள். வருபவர்களுக்கெல்லாம் தம்முடைய உறுதியைக்கூறி 'உம்முடைய குமாரன் ஸம்ஸ்க்ருதம் படித்திருக்கிறானோ?' என்று வினவுவர். இல்லையில்லை யென்று சொல்லிப்போய்விடுவர்கள். ஒருவர்மட்டும் பொய் சொல்லத்துணிந்து 'என்குமாரன் திருவையாற்றுக் காலேஜில் சாஸ்த்ரங்களெல்லாம் வாசித்திருக்கிறான்; அவரைக் கேட்டுப்பார்க்கலாம், இவரைக் கேட்டுப் பார்க்கலாம்' என்றார். பெண்ணின்தந்தை அதை நம்பிவிட்டார். பெண்ணைக் கொடுத்து விவாஹமும் செய்தாயிற்று.

ஒருநாள் மாமனார்வந்து 'நமது க்ருஹத்தில் இப்போது நவராத்ரிபூஜை நடந்துவருகிறது; அடுத்த வெள்ளிக்கிழமையன்று ஸரஸ்வதீபூஜை; அன்று நமது மாப்பிள்ளையை நம் அகத்துக்கு அனுப்பிவைக்கவேணும்' என்று ஸம்பந்தியிடம் கோரினார். ஆகா! அப்படியே அனுப்புகிறேன் என்றுசொல்லி அவரை அனுப்பிவிட்டார். பிறகு குமாரனையழைத்து 'பயலே! ஒன்றும் படியாதவுன்னை ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்கள் படித்தவனாகப் பொய்சொல்லி விவாஹம் செய்வித்துவிட்டேன்; மாமனார்வந்து உன்னைஸரஸ்வதீபூஜை யன்று தம்மில்லத்திற்கு அனுப்பும்படி சொல்லிப்போனார்; நானும் அப்படியே அனுப்புகிறேனென்று சொல்லிவிட்டேன். அன்று ஸரஸ்வதீ பூஜையாகையால் மாமனார் தம்மிடமுள்ள ஓலை ஸ்ரீகோசங்களையெல்லாம் எடுத்துச்

சோதித்துப் பூஜைக்கு வைப்பர்; அப்போது அங்கு நீ வாய் திறவாமல் வாளா உட்கார்ந்திருந்தால் நன்றாயிராது. இரண்டுநாளில் உனக்கு நான் சில ஸம்ஸ்க்ருத வார்த்தைகளைச் சொல்லிவைக்கிறேன். அதை நீ கெட்டியாகச் சிந்தனை செய்து உபயோகப்படுத்தினால் கௌரவமாகத் திரும்பிவரலாம் என்றுசொல்லி மேல்வரும் விதமாகக் கற்பித்துவைத்தார். (அதாவது) மாமனார் ஒரு ஸ்ரீகோசத்தை அவிழ்த்து தும் புதட்டிக்கட்டுவர்; அப்போது நீ ''கோயம் க்ரந்த:?'' (இது என்னபுத்தகம்?) என்று கேள். அவர் ஸ்ரீராமாயணக்ரந்த: என்றோ ஸ்ரீபாஷ்யக்ரந்த: என்றோ சொல்லுவர்; அப்போது நீ ''இதம் மயா படிதம்'' (இதைநான்வாசித்திருக்கிறேன்) என்று சொல்லு. மாமனார் மறுபடியும் ஒரு ஸ்ரீகோசத்தை அவிழ்த்துக் கட்டுவர்; அப்போதும் நீ 'கோயம் க்ரந்த:?' என்று கேள். புத்தகத்தின் பேரைச்சொல்லுவர் மாமனார். அப்போது நீ (இதமபி மயா படிதம்) என்றுசொல்லு; (இதையும்நான் வாசித்திருக்கிறேன் என்கை.) இப்படியே சொல்லிவிட்டு கௌரவமாய் வந்து சேர் என்றார். இந்தஇரண்டு வார்த்தைகளை மூன்றுநாள் உருப்போட்டான் குமாரன். மஹாநவமியன்று மாமனார் வீட்டுக்குச் சென்றான் மாப்பிள்ளை. தகப்பனார் கற்பித்தபடியே பாடம் ஒப்பித்து வருகிறான். மாமனார் ஏழெட்டுபுத்தகங்கள் எடுத்தான பிறகு எழுதாத ஏடுகளைக் கட்டிவைத்திருக்கிற ஒரு ஓலைச்சுவடியை எடுத்தார்; மாப்பிள்ளை மாமூல் படியே கோயம் க்ரந்த:? என்றான். மாமனார் 'அலேகக்ரந்த:' (எழுதாத வெறும்புத்தகம்) என்றார். மாப்பிள்ளை (இதமபி மயா படிதம்) என்றான். ஒன்றுமெழுதாத இந்தவெறும் சுவடியையும் நான் படித்திருக்கிறேனென்றபடி. இதற்கு மேலும் இக்கதை தொடரவேணுமோ? மாப்பிள்ளை மூர்க்கனானாலும் பெண் நன்றாக ஸம்ஸ்க்ருதம் படித்தவளானபடியாலே கணவனுடைய மூர்க்கத்தனத்தையறிந்து மிகமிக வருந்தி ''அப்பா! இந்த முஸலகிஸலயத்திற்கா என்னைமணஞ்செய்து கொடுத்தீர்?'' என்று அழுதுகொண்டே சொல்லிக் கணவனது தலையில் ஒரு குட்டு குட்டினளாம். அவன் அந்த அவமானம் பொறுக்க முடியாமல் உடனே காசிக்குச் சென்று ஏழெட்டு வருஷங்கள் வாசித்து வித்வானாகி ஊருக்குத் திரும்பிவந்து முஸலகிஸலயம் என்றே பெயருள்ள ஒரு புத்தகத்தை எழுதினனாம். அப்புத்தகத்தின் பெயர் மட்டும் ஏதோ ஒரு லைப்ரரியின் Manuscript listல் (முஸல கிஸலயம் என்று) இருக்கக் கண்டேன்.

மற்றொரு மாப்பிள்ளை கதையும் திருத்தகப்பனார் ஸாதிக்கக் கேட்டிருந்ததுண்டு. அதாவது. ஒரு மாப்பிள்ளை மாமனார் அகத்துக்குச் செல்லவேண்டியிருந்தது; அவருக்குக் காதில் கடுக்கன் இல்லாமலிருந்தது. தன்னுடைய தோழனொருவன் நல்ல கடுக்கன் அணிந்து கொண்டிருந்தான். அதை இரவலாக வாங்கித் தானணிந்து கொண்டு அந்தத் தோழனையும் உடன் அழைத்துக்கொண்டு மாமனாரகத்துக்குச் சென்றான். அங்கே இடைகழித்திண்ணையில் வீற்றிருக்கிறார். தோழனும் கூடவேயிருக்கிறான். மாப்பிள்ளையைப் பார்க்க வந்த பலரும் ''இவர் தானோமாப்பிள்ளை''? என்ற போது தோழன் ''மாப்பிள்ளை இவர்தான். கடுக்கன் என்னுடையது'' என்றான். அது கேட்ட மாப்பிள்ளை கோபக்குறியைக் காட்டினார். மற்றொருவர் வந்து (மாப்பிள்ளை இவர்தானோ) என்ன ''மாப்பிள்ளை இவர் தான் கடுக்கன் இரவல்'' என்றான், அதற்கும் கோபக் குறியைக் காட்டினார் மாப்பிள்ளை. அதன் பிறகு வேறொருவர்வந்து மாப்பிள்ளை இவர்தானோ என்ன ''மாப்பிள்ளையும் இவர்தான் கடுக்கனும் இவருடையது தான்'' என்றான் தோழன். 'பாவீ! கடுக்கன் சங்கதியை நீ ஏன் எடுக்கிறாய்'' என்று சீறினார் மாப்பிள்ளை. பிறகு ஒருவர் வந்து ''மாப்பிள்ளை இவர்தானோ?'' வென்று கேட்க, மாப்பிள்ளை இவர்தான். கடுக்கன் சங்கதியைப்பற்றி எடுத்தால் இவர்க்குக் கோபம் வருவதால் அதைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை'' என்றான். இக்கதை மேலும் தொடர்கிறது. ஆனால் இவ்வளவோடு நிறுத்தப்பட்டது.

# அபூர்வார்த்த ரத்ன நிதி
(முன்தொடர்ச்சி)

## 147. நைவாய வெம்மேபோல்

திருவாய்மொழியில் இரண்டாம்பத்தின் முதற்பதிகம் ¤வாயுந்திரையுகளும் கானல் மடநாராய்!¤ என்று தொடங்குவது; இப்பதிகத்தின் பிரமேயம் வெகு விலக்ஷணமாயிருக்கும். ஸம்ஸாரிகள் உலகத்திலுள்ளாரெல்லாரையும் தங்களைப் போலவே ¤உண்டியே உடையே உகந்தோடுமவர்களாக நினைப்பதுபோல, ஆழ்வாரும் உலகிலுள்ள ஸகலமான பொருள்களும் தம்மைப்போலவே எம்பெருமானைப் பிரிந்த வருத்தத்தினுல் நோவுபடுவனவாகக் கொண்டு கிலேசப்படுவது இப்பதிகத்தின் பிரமேயம். நாரை அன்றில் கடல் காற்று சந்திரன் முதலிய பொருள்களை நோக்கி, அவற்றுக்குண்டான ஸ்வாபாவிகமான சில (விகாரத்) தன்மைகளை இயற்கையாகக் கருதாமல் பகவத் விச்லேஷ வ்யஸனத்திலுண்டானவையாகக் கருதி அவற்றுக்குமாகத் தாம் வருந்துகிருராழ்வார். ''நைவாய வெம்மே போல்'' என்கிற ஆரும் பாட்டானது இளம்பிறையைநோக்கி வருந்துவதாம். கலாமாத்திரமாய்த் தேய்ந்து தோன்றின இளம்பிறைச் சந்திரனைக்கண்டு, ''அந்தோ! உன்வடிவில் எழிலெல்லாம் இழந்தாயே, நீயும் எம்பெருமானுடைய பொய்யுரையிலே நம்பிக்கைகொண்டு நான் பட்டபாடு படுகின்ருய் போலும்'' என்ருராயிற்று. எம்பெருமானுடைய பொய்யுரை எது? என்று கேட்கவேண்டா; அப்பெருமான் ஆபத்காலத்திலே வந்து உதவுமவனென்கிற ப்ரஸித்திக்கு ஏற்ப வந்து உதவாமையாலே ''ந த்யஜேயம் கதஞ்சந'' இத்யாதிகளான அவனது வார்த்தைகளைப் பொய்யுரையாகத் திருவுள்ளம்பற்றினபடி. ஆண்டாள் ''பாவியேன் தோன்றிப் பாம்பணையார்க்கும் தம் பாம்புபோல் நாவுமிரண்டுளவாயிற்று'' என்றதை இங்கு நினைக்க.

## 148. நைமிசாரணியத்துளெந்தாய்.

திருமங்கையாழ்வாருடைய பெரிய திருமொழி முதற்பத்தில் ஆரும் பதிகம் பாட்டுத்தோறும் ''நைமிசாரணியத்துளெந்தாய்'' என்றே வருவது. வடநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்ருன நைமிசாரண்யத்தை மங்களாசாஸனம் செய்கிற ஆழ்வார் இப்படி யருளிச்செய்கையாலே நைமிசாரண்யத்தில் ஒரு ஸன்னிதி இருப்பதாகவும் அதில் அர்ச்சா விக்ரஹமாக ஒரு எம்பெருமான் எழுந்தருளியிருப்பதாகவும் அவரை ஆழ்வார் மங்களாசாஸனம் பண்ணுவதாகவும் நினைக்கக்கூடும். 'எந்தாய் இந்தளூரீரே!' 'எந்தாய் தண் திருவேங்கடத்துள் நின்ருய்' இத்யாதி பாசுரங்களிற்போல இங்கும் நினைப்பது அஸம்பாவிதமாகாது. இங்கு உண்மை கேண்மின். வடதிசை மதுரை சாளக்கிராமம் துவரை அயோத்தி விருந்தாவனம் வதரி முதலான திருப்பதிகளில் ஒரு ஆலயமும் ஆழ்வார் காலத்தில் இருந்ததில்லை. சில ஸம்வத்ஸரங்களுக்கு முன்ஞக அயோத்தி, விருந்தாவனம் முதலான தலங்களில் ஸ்ரீமதுபயவே. யோகி. பார்த்தஸாரதி ஐயங்கார், ஸ்ரீமத் கோவர்த்தனம் ஸ்வாமிபோன்ற மஹான்களால் ஸன்னிதிகள் ஸ்தாபநம் செய்யப்பட்டு, தென்ஞட்டிற்போல உத்ஸவாதி விசேஷங்களுடனும் விளங்குகின்

றன; பண்டைக்காலத்தில் எங்கும் ஒரு ஆலயமும் இருந்ததில்லை. ஸ்ரீ பதரி க்ஷேத்ரத்தைப்பற்றி நாம் எழுதியுள்ள ஆராய்ச்சி நூலில் இதை விவரமாகக் காணலாம். நைமிசாரண்யத்தில் சிலவருஷங்களுக்கு முன்பு வானமாமலை மடத்து ஜீயர்கள் (எனக்குத்தெரிந்து) ஒரு ஆலயத்தை நிர்மாணித்துள்ளார்கள். அவ்வால யத்தில் நைமிசாரணியப் பதிகத்தைப் பூர்த்தியாகக் காவியாலெழுதி (இது பாடல் ஸ்தலம்) என்றும் எழுதிவைத்திருக்கிறார்கள். நாளடைவில் இதை வாஸ்தவமாக எண்ணி விடுவாருமுளர். புஷ்கரக்ஷேத்ரத்தில் எம்பெருமான் பிரமனுக்குத் தீர்த்த ரூபியாக ஸேவை ஸாதித்தது போல அப்பெருமான் நைமிசாரண்யத்தில் அரண்ய ரூபியாக ஸேவை ஸாதித்தருளினன். அவ்வரண்யத்தை நோக்கியே பாசுரம் அமைந்தது. "நைமிசாரணியத்துளெந்தாய்!" என்பதற்குப்பொருள் 'நைமிசாரண்ய ரூபியானபகவானே!' என்பதுதான்!' 'சாளக்கிராமத் தடிகளை' என்பதற்கு ஸாளக் ராம ரூபியான எம்பெருமானை' என்பது பொருள். "வதரியாச்சிராமத் துள்ளான்" என்பதற்கு 'பதரிகாச்ரம ரூபியான எம்பெருமான்' என்பதுதான் பொருள். வட நாட்டுத் திருப்பதிகளுள் திருவேங்கடமொன்று தவிர மற்ற எந்த திவ்யதேசத்திற் கும் ஆலயத்தைப் பற்றிப் பாசுரம் அவதரித்ததன்று.

## 149. நொடியாயிரத்திப்பத்து

திருவாய்மொழியில் (10-5) *கண்ணன் கழலிணைப் பதிகத்தில் நிகமனப்பா சுரம் "நெடியானருள் சூடும் படியான் சடகோபன் நொடியாயிரத்திப்பத்து அடி யார்க்கருள்பேறே" என்பதாம். இதில் மூன்றுமடியிலுள்ள 'நொடி' என்பதற்கு 'சொன்ன' என்று பொருள். 'சடகோபன் சொன்னவாயிரம்' என்றதாம். இவ்வுண் மைப் பொருளை யறியாதார் பலர் சொல்லி வருவதென்ன வென்றால் கேண்மின். 'திருவாய்மொழியை அவஸரத்திற்கேற்பக் கன வேகமாக ஸேவிப்பதுண்டு; முன் னடி பின்னடி ஸேவைஎன்பதும் ப்ரஸித்தம். திருவாய்மொழியாயிரத்தை ஒரு நொடியில் ஸேவித்து விட்டோம் என்று சொல்லுகிற ஸந்தர்பங்களு முண்டு. அத்த கைய ஸந்தர்பங்களில் ஆழ்வாரே நொடியாயிரம் என்று ஸாதித்திருக்கிறாரே' என்று சிலர் சொல்லிவருகிறார்கள். அது விநோதோக்தி என்று விடத்தக்கது. இதற்குமேல் இதைப்பற்றி என்ன எழுதுவது!

## 150. நோற்றநோன்பிலேன்.

திருவாய்மொழியில் (5-7) வானமாமலைப்பதிகம் "நோற்ற நோன்பிலேன்" என்று தொடங்குவது. வானமாமலைக்குச் சிரீவர மங்கல நகர் என்று திருநாமம். இப்பதிகத்தில் ஒருபாட்டில் "வானமாமலையே" என்றருளிச் செய்திருக்கையாலே வானமாமலை என்பது பெருமாள் திருநாமமாகவும் கொள்ளப்படும். அது நிற்க. பதிகத்தின் தொடக்கத்தில் "நோற்றநோன்பிலேன்" என்கிறார் ஆழ்வார். 'நான் கர்மயோகம் ஒன்றும் செய்திலேன்' என்று சொல்ல வேண்டிய ஸ்தானத்தில் நான் நோன்பொன்றும் நோற்றிலேன் என்று சொல்லவேண்டியிருக்க 'நோற்ற நோன்பி லேன்' என்றதற்குக் கருத்தென்ன என்று ஆராயவேண்டும். நான் நோற்ற நோன்பு இல்லையே யொழிய நீ நோற்ற நோன்பு உள்ளது என்பது உட்பொருள். எம்பெரு மான் நோற்ற நோன்பு 'யாஞெட்டி யென்னுள் இருத்துவமென்றிலன்

தாஞெட்டி வந்தென் தனிநெஞ்சை வஞ்சித்து ஊஞெட்டி நின்று என்னுயிரில் கலந்தியல்வான்'' ''இசைவித்தென்னையுன் தாளிணைக் கீழிருத்துமம்மான்'' என்னும் பாசுரங்களிற் காணத்தக்கது. திருப்பாவையில் *கறவைகள் பின்சென்று'' என்கிற பாசுரத்தில் தங்களுடைய ஆகிஞ்சந்யத்தைச் சொல்லப்புகுந்த ஆய்ச்சிகள் அதைச் சொல்லிவிட்டு உடனே 'உன்றன்னைப் பிறவிபெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்' என்றதை இங்கு நினைப்பது. 'நாங்களாகப் பண்ணின புண்ணியம் ஒன்றுமில்லையாகிலும் எங்கள் குலத்திலே நீயாக வந்து பிறக்கும்படியான புண்ணியத்தை யாம் உடையோம்' என்றாப்போலவே இங்கும் ஆழ்வார் அருளிச்செய்கிறபடி.

## 151. பத்தராவிப் பெருமாள்.

எம்பெருமானுக்கு. பக்தவத்ஸலன் என்கிற திருநாமம் தமிழில் பத்தராவி என்று வழங்கப்படுகிறது. பத்தராவி என்கிற திருநாமம் இரண்டு திவ்யதேசத்தெம்பெருமான்களுக்கு ப்ரஸித்தமாகவுள்ளது. திருநின்றவூர்ப் பெருமாளுக்கும் திருக்கண்ண மங்கைப் பெருமாளுக்கும். திருநின்றவூர் என்பது தொண்டைநாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டனுள் ஒன்று. இது திருவெவ்வுளூர்க்கும் திருவல்லிக்கேணிக்கும் இடையிலுள்ளது. பதியே பரவித்தொழும் தொண்டரான திருமங்கையாழ்வார் 'தானுகந்த ஊரெல்லாம் தன் தாள் பாடி' வருமடைவிலே திருவெவ்வுளூர்க்கு அடுத்தபடி திருநின்றவூர்க்கும் பதிகம் பாடியிருக்க வேண்டும். பெரிய திருமொழி இரண்டாம்பத்தில் இரண்டாம் பதிகம் திருவெவ்வுளூர்ப் பதிகமாக வுள்ளது. அதற்கடுத்தபடி திருவல்லிக்கேணிப் பதிகமே யமைந்துள்ளது. இடையிலுள்ள திருநின்றவூர்ப் பெருமானை விட்டுவிட்டார். ஆனல் அடியோடு விட்டுவிடவில்லை. திருவல்லிக்கேணிக்கும் திருநீர்மலைக்கும் சென்று பாசுரங்கள் பாடியபிறகு திருக்கடன்மல்லைக்கு வந்து பாசுரம் பாடும்போது *பாராயதுண்டுமிழ்ந்த* பதிகத்தின் இரண்டாம் பாசுரத்தில் 'நின்றவூர் நித்திலத்தை... கண்டது நான் கடல்மல்லைத் தலசயனத்தே' என்று பாடியுள்ளார். இங்கே பெரியார் சொல்லியுள்ள ஐதிஹ்யம் இன்சுவை மிக்கது. அதாவது—திருமங்கையாழ்வார் திருவெவ்வுளூர்க்குப் பிறகு திருநின்றவூர்க்கு எழுந்தருளினர். அப்போது பத்தராவிப் பெருமாள் 'என்னைப்பெற்ற தாயார்' என்கிற தேவியாரோடு போக பாரவச்யத்தாலே அந்யபரராயிருந்து ஆழ்வாரைக் கணிசியாமலிருந்திடவே ஆழ்வார் பாடாமலே புறப்பட்டுச் சென்றுவிட்டார். பிறகு ஆழ்வார் அங்கு எழுந்தருளினதையும் மீண்டு சென்றதையுமறிந்த என்னைப்பெற்ற தாயார் பெருமானை நோக்கி 'அநியாயமாய் ஆழ்வார் பாசுரத்தை இழந்துவிட்டீரே!' என்று ஏசி, 'விரைந்துசென்று ஆழ்வாரிடம் பாசுரம் பெற்று வாரும்' என்று சொல்லிப் புறப்படவிட, பத்தராவிப் பெருமாள் ஆழ்வார் சென்ற வழியைப் பின்தொடர்ந்து கொண்டு ஓடினர். அப்போது திருக்கடன் மல்லையில் ஆழ்வார் தலசயனத்துறைவாரைப் பாடிக்கொண்டு நிற்கக் கண்டபத்தராவிப் பெருமாள் சோதிமயமாக நிற்கிருரங்கு. இவரை நோக்கி ஆழ்வார் 'நீர் யார்?' என்று கேட்க 'தான் நின்றவூர்ப் பெருமாள். உம்மிடம் பாசுரம் பெற வந்தேன்' என்று கூற 'நின்றவூர் நித்திலத்தைக் கடன்மல்லைத் தலசயனத்தே கண்டேன்' என்று பாசுரம்

பாடிவிட்டுப் 'போய்வாரும்' என்றாராழ்வார். அதைப் பெற்றுப்போன பெருமாள் என்னைப் பெற்ற தாயாரிடம் இதைத் தெரிவிக்க 'ஒவ்வொரு பெருமாளுக்கும் பதிகம் பாடுகிற ஆழ்வாரிடம் இந்தத் துணுக்கையைப் பெற்றுக்கொண்டு வந்தீரே! மறுபடியும் போய்வாரும், பதிகம் பெற்றுவாரும்' என்று சொல்லியனுப்ப, மறுபடியும் புறப்பட்டுத் திருநின்றவூர்ப் பெருமாள் தொண்டைநாடும் நடுநாடும் கடந்து சோழநாட்டிலே சென்றுகொண்டிருக்கிறாராழ்வார் என்று கேட்டுத் திருக்கண்ணமங்கையிலே நிற்குமாழ்வாரைக் கண்டார். இவரை நோக்கி ஆழ்வார், 'மீண்டும் ஏன் வந்தீர்?' என்று கேட்க, தேவியார் சொன்னதைச் சொல்ல, அது கேட்ட ஆழ்வார் திருக்கண்ணமங்கைப் பதிகத்தில் ஐந்தாவது பாட்டில் 'நின்றவூர் நின்ற நித்திலத்தொத்தினை......கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே' என்று பாடி, 'போய் வாரும்' என்று சொல்லி யனுப்பிவிட்டார். ஆக இவ்விரண்டிடங்களில் தான் திருநின்றவூர்ப் பெருமாளுக்குப் பாடல் உள்ளது. இந்த ஐதிஹ்யத்தை ரஸோக்தியாகவும் கொள்ளலாம்.

## 152. பாண்டவதூதன் ஸன்னிதி - பாடகம்.

பெரியகாஞ்சீபுரத்தில் பாண்டவதூதன் ஸன்னிதியென்பது ப்ரஸித்தம். தொண்டைநாட்டுத்திருப்பதிகள் இருபத்திரண்டில் இஃதொன்று. இத்தலம் அருளிச்செயல்களில் பாடகம் என்றேபாடல் பெற்றுள்ளது. பாண்டிநாட்டில் ஆழ்வார் திருநகரியைச் சேர்ந்த நவதிருப்பதிகளில் "புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள் நின்று" என்கிற திருவாய்மொழிப்பாசுரத்தின் படி திருப்புளிங்குடியிலே சயனத்திருக்கோலமும் திருவரகுணமங்கையிலே வீற்றிருந்த திருக்கோலமும், ஸ்ரீவைகுண்டத்திலே நின்றதிருக்கோலமுமாக ஸேவைதந்தருள்வது போல, கச்சியில் "நின்றதெந்தை யூரகத்து இருந்ததெந்தை பாடகத்து, அன்று வெஃகணைக் கிடந்தது" (திருச்சந்த விருத்தம்) என்ற திருமழிசைப்பிரான் பாசுரத்தின்படி—திருவூரகமென்கிற உலகளந்த பெருமாள் ஸன்னிதியிலே நின்ற திருக்கோலமும், திருப்பாடகமென்கிற பாண்டவதூதன் ஸன்னிதியிலே வீற்றிருந்த திருக்கோலமும், திருவெஃகாவென்கிற யதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதியிலே சயனத் திருக்கோலமுமாக ஸேவை ஸாதித்தருள்வது மிகவற்புதம். ப்ரக்ருதம் திருப்பாடகமென்கிற பாண்டவதூதன் ஸன்னிதியைப் பற்றிப் பேசுகிறோம். இத்தலத்தில் எம்பெருமானுடைய வீற்றிருந்த திருக்கோலம் மிகமிக ஆச்சரியமானது. திருமேனியின் திருவளர்த்தி இத்தலத்திற்போல் நிலவுலகத்தில் வேறெங்கும் கிடையாது. இப்பெருமானுக்குப் பாண்டவதூதனென்று திருநாமம் எக்காரணம் பற்றி வந்தது? அருளிச்செயல்களில் இத்தலம் பாடகமெனப்படுதற்கு யாதுகாரணம்? என்று பலர் வினவுவதுண்டு. இந்த ஜிஜ்ஞாஸை பலர்க்குமுண்டு. தத்துவமுணர்த்துகிறோம்.

பாண்டவர்களையும் கௌரவர்களையும் எவ்வகையினாலும் ஒருங்கவிட்டு வாழ்வித்தற் பொருட்டுக் கண்ணபிரான் துரியோதனனிடம் தூது சென்றபோது கண்ணன் தன்னிடம் வரப்போகிறான் என்பதையறிந்த துரியோதனன் எவ்வகையினாலேனும் க்ருஷ்ணனை முடித்து விடுவதே கருமமென்று துணிந்து ரஹஸ்யமாகத்

தனது ஸபா மண்டபத்தில் மிகப்பெரிய நிலவறையொன்றைத் தோண்டுவித்து அதில் அனேக மல்லர்களை ஆயுதபாணிகளாய் உள்ளேயிருக்கவைத்து அப்படுகுழியைப் பிறர் அறியவொண்ணாதபடி மூங்கிற்பிளப்புகளால் மேலேமூடி அதன் மேற் சிறந்த ரத்நாஸந மொன்றையமைத்து வைத்திருந்தான். மறுநாள் கண்ணபிரான் துரியோதன ஸபைக்கு எழுந்தருளினவுடனே அவ்வாஸநத்தின் மீது கண்ணபிரானை வீற்றிருக்கச் சொல்ல கண்ணன் அங்ஙனமே அதன் மேலேறின மாத்திரத்திலே மூங்கிற்பிளப்புக்கள் முறிபட்டு ஆஸநம் உள்ளிறங்கிப் பிலவறையிற் செல்லுமளவில் மல்லர்கள் எதிர்த்துவர, பெருமாள் மிகப்பெரிதாக விச்வரூபமெடுத்துப் பல கைகளையும் கால்களையும் கொண்டு எதிர்த்து அந்த மல்லர்களை மடிவித்தான் என்பது இதிஹாஸம். இதன்படி அச்சமயத்திற் கொண்ட பெரியதிருவுருவமே பாண்டவதூதன் ஸன்னிதியில் ஸேவை ஸாதிப்பது. பாண்டவதூதனை ஸமயத்தில் இந்த சரிதை நடந்தபடியால் பாண்டவதூதன் என்று இத்தலத்துப் பெருமானுக்குத் திருநாமமாயிற்று. இனி பாடகம் என்பதைப் பற்றித் தெரிவிப்போம். பாடு+அகம்=பாடகம். பாடு என்பதற்குப் பெருமை என்று பொருள். பாடு தோற்ற எழுந்தருளியிருக்கிற இடம் பாடகம். இந்த இதிஹாஸம் திருமங்கையாழ்வாரால் திருக்கடன் மல்லைப் பதிகத்திலும் அநுஸந்திக்கப்பட்டுள்ளது. பெரியதிருமொழியில் (2-5-5) "தூதில் சென்று அப்பொய்யறை வாய்ப்புகப் பெய்த மல்லர் மங்கக் காய்ந்தானை" என்று. ஆனால் அங்குப்பெரிய திருமேனியைப் பரிக்ரஹித்த விஷயம் சொல்லப்படவில்லை. திருக்கண்ணங்குடிப் பதிகத்தில் மட்டுமே "அரவு நீள் கொடியோனவையுளாசனத்தை யஞ்சிடாதேயிட அதற்குப் பெரியமாமேனி அண்டமூடுருவப் பெருந்திசையடங்கிட நிமிர்ந்தோன்" என்று இவ்விஷயம் கூறப்பட்டுள்ளது.

## 153. பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்தவார்த்தை

ஸ்ரீவசனபூஷணத்தில் இரண்டாம் ப்ரகரணத்தில் பாகவதாபசாரத்தின் கொடுமையை விளக்கிவருமிடத்து "இவ்விடத்திலே வைநதேய வ்ருத்தாந்தத்தையும் பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஆழ்வான் பணித்த வார்த்தையையும் ஸ்மரிப்பது" என்கிற சூர்ணிகையுள்ளது. வைநதேய வ்ருத்தாந்தத்தைப் பிறகு தெரிவிப்போம். கூரத்தாழ்வானுடைய சிஷ்யரான பிள்ளைப்பிள்ளையாழ்வானுக்கு ஸ்வாசார்யர் அருளிச்செய்த வார்த்தை இன்னதென்பதை மணவாளமாமுனிகள் வ்யாக்யானித் தருளினர். அதன்ஸாரம் வருமாறு—பிள்ளைப் பிள்ளையாழ்வானென்பவர் ஆபிஜாத்யம் முதலியவற்றால் மேம்பட்டவராகையாலே பாகவத விஷயங்களில் விநயமில்லாமல் அபசாரப்பட்டுக்கொண்டே யிருந்தார்; ஆழ்வான் இதைக்கண்டு "ஐயோ! இவர்க்கு இந்த பாகவதாபசாரம் இவருடைய ஜ்ஞாநாநுஷ்டானங்களெல்லாவற்றையும் கீழ்ப்படுத்தித் தானே மேலாகி விநாசத்தை விளைத்திடுமே! அதுக்கு வேலியிட்டு வைக்கவேணும்" என்று திருவுள்ளம்பற்றி ஒரு புண்யகாலத்திலே நீராட்டமானபின் இவரை நோக்கி "எல்லாரும் தானம் பண்ணுகிற இக்காலத்திலே நீரும்நமக்கொரு தானம் பண்ணமாட்டீரோ?" என்ன, "அடியேன் எத்தை தானம் பண்ணுவது, எல்லாம் ஸ்வாமியினுடையதே யன்றோ" என்ன; "அஃது இருக்கட்டும், மநோ வாக்காயங்கள் மூன்றாலும் பாகவதாபசாரப் படாமல் வர்த்திக்கக்கடவேன் என்று நம் கையிலே உதகதானம் பண்ணவேணும்" என்று ஆழ்வான் அருளிச்செய்ய, அப்படியே இவரும் உதக தானம் பண்ணித்தந்த பின்பு ஒருநாள் பூர்வ வாஸனையாலே பாகவதாபசாரப்பட நேர்ந்தவாறே "நாம் இனி

முடிந்தோம்'' என்று பயப்பட்டு அன்று ஆழ்வான் ஸந்நிதிக்கு விடைகொள்ள வெள்கித் தம் திருமாளிகையிலேயே இருந்துவிட, இவர் வழக்கப்படி வருகிற காலத்தில் வாக்காணுமையாலே ஆழ்வான் இவர் திருமாளிகையிலே யெழுந்தருளி வினவியருள அவர் தமக்கு மாநஸிகமாகபாகவதாபசாரம் நேர்ந்தமையை விண்ணப்பம் செய்து "கரணத்ரயத்தாலும் அபசாரம் விளையாதபடி இத்தேஹத்தோடு வர்த்திக்கை அறிதாயிருக்கின்றது! என் செய்வேன்?'' என்று திருவடிகளைக் கட்டிக் கொண்டு கிடந்து வருந்த, "இத்தனை அநுதாபம் இவர்க்கு உண்டாயிற்றே!" என்று உகந்தருளி ''மாநஸிகமான அபசாரத்திற்கு அநுதாப முண்டாகவே ஈச்வரன் பொறுத்தருள்வன், ப்ரத்யக்ஷத்தில் ராஜ தண்டனை கிடைக்குமென்ற பயத்தாலே காயிகமாக ஒருவரையும் நலியமாட்டீர்; இனி வாக்கொன்றையும் நன்ருகக் குறிக் கொண்டு இரும்'' என்றருளிச்செய்தார். ... ... ...

## 154. பீஷ்மத்ரோணவதிக்ரம்ய

மஹாபாரதத்தில், கண்ணபிரான் பாண்டவர்களுக்காகத் தூதெழுந்தருளின போது முன்னம் துரியோதநாதிகளிடம் சென்று 'நாளைக்குப் பேசவருகிறேன்' என்று சொல்லிவிட்டுப்போனார். மறுநாள் போஜனத்திற்கு நம்முடைய இல்லத்திற்கே கண்ணன் வருவன் என்று நிச்சயித்த மூவர் (பீஷ்மாசார், த்ரோணாசார், துரியோதநன்) தங்கள் தங்கள் க்ருஹங்களிலே பஞ்ச பக்ஷ்ய பரமாந்நம் சமைத்து வைத்திருந்தார்கள். இது இப்படியிருக்க, கண்ணபிரான் செய்தருளினதென்னென்னில் ''சுசிஸ் து ப்ரயதோ பூத்வா விதுரோந்நம் உபாஹாரத்'' ''விதுராந் நாநி புபுஜே சுசீநி குணவந்தி ச'' எனகிறபடியே விதுரர் திருமாளிகையிலே அமுது செய்துவிட்டு சந்தன மணிந்துகொண்டு வெற்றிலைபாக்கும் அமுது செய்து துரியோதனுதியரிடம் சென்ருன். அப்போது கண்ணனைக் கண்ட துரியோதநன் ''போஜனமாய்விட்டதா என்ன?'' என்று கேட்கக் கண்ணபிரான் விடை கூறினர்—''ஆம் ஆயிற்று, விதுரர் திருமாளிகையிலே போஜனத்தை முடித்துக்கொண்டுதான் வந்தேன்'' என்று. அப்போது சினங்கொண்ட துரியோதனன் ''பீஷ்மத்ரோணவதிக்ரம்ய மாம் சைவ மதுஸூதந, கிமர்த்தம் புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷல போஜநம்?'' என்ருன். இதன் பொருளாவது—''ஜ்ஞானத்தில் சிறந்த பீஷ்மாசாரும். ஜாதியிற் பெருத்த த்ரோணுசாரும், செல்வத்தில் சிறந்த நானும் இருக்க மூவரையும் உபேக்ஷித்துவிட்டு ஒரு சூத்ரனுடைய சோற்றை எப்படியப்பா உண்டாய்?'' என்கை. இதில் 'புண்டரீகாக்ஷ!' என்ற விளிச்சொல் விழுந்திருப்பதைக் குறிக்கொள்ள வேணும். இது இடித்துச் சொல்லுகிற வார்த்தையல்லவா? அரே மூட!, அரே மூர்க்க! என்னவேண்டுமிடத்து 'புண்டரீகாக்ஷ' என்றது பரவசமாக வெளி வந்த சொல்லாகும். (இதைப்பற்றித் தனியே பேசுவோம்) இதற்குக் கண்ணபிரான் தந்தருளின விடையாவது ''த்விஷதந்நம் ந போக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத், பாண்டவாந் த்விஷஸே ராஜந்! மம ப்ராணா ஹி பாண்டவா:'' என்று. சத்ருக்களுடைய சோற்றையுண்ணவும் கூடாது. சத்ருக்களுக்குச் சோறிடவும் கூடாது என்றவளவில்லை, உனக்கு நான் சத்ருவா? என்று துரியோதநன் கேட்க [பாண்டவாந் த்விஷஸே ராஜந்] 'நீ பாண்டவர்களுக்கு த்வேஷியல்லவா?' என்ன, அதற்குத் துரியோதநன் நாங்கள் தாயாதிச் சண்டையினுல் த்வேஷித்தால் அதைப்பற்றி உனக்கென்ன; என்றுகேட்க, [மம ப்ராணா ஹி பாண்டவா:] 'என்னுடைய உயிரல்லவா பாண்டவர்கள்' என்ருன். ''க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:'' என்றிருக்குமவர்களை நலிவது என்னை நலிந்தபடியன்ருே! உடலிலே கத்தியிட்டால் மருந்திட்டு ஆற்றலாம்; உயிரிலே கத்தியிட்டால் அதற்கு மருந்தேது! என்றபடி. இதனுல் பகவான் தன்னளவிலே அபசாரப் படுமவர்களைத் தனக்கு சத்ருவாகக் கொள்ளான். தனக்கு உயிர்நிலையாய்த் தன் அடியார்களான பாகவதர்களிடத்திலே அபசாரப்படுமவர்களையே தனக்குச் சத்துருவாக நினைப்பன் என்று தேறிற்று. ... ... ... ...